Regd. No. 2975.

ஸ்ரீ:

# SRI RAMANUJAN

*Editor*: P. B. ANNANGARACHARYA, L. KANCHEEPURAM.

# ஸ்ரீராமாநுஜன் 211

ஆசிரியர்: ஸ்ரீகாஞ்சி. P. B. அண்ணங்கராசாரியர்.

வருடச் சந்தா ரூ. 5 ஜீவியச் சந்தா ரூ. 116.

பேரருளாளன் பெருந்தேவித்தாயார் திருவடிகளே சரணம்.



ஆழ்வார் எம்பெருமானார் ஜீயர் திருவடிகளே சரணம்

ஆழ்வார்கள் வாழி அருளிச்செயல் வாழி *
தாழ்வாது மில்குரவர் தாம்வாழி * — ஏழ்பாரு
முய்ய வவர்க ளுரைத்தவைகள் தாம் வாழி *
செய்யமறை தன்னுடனே சேர்ந்து.

1—6—1966ல் வெளியிட்டது.

# ஸ்ரீ ராமாநுஜன்—211







சென்னை ஸத்க்ரந்த ப்ரகாசனஸபா மூலமாக மாதந்தோறும் வெளிவரும் பத்திரிகை.

ஆசிரியர் : ஸ்ரீ காஞ்சீ. P. B. அண்ணங்கராசாரியர்.

ஸம்புடம் 18 | 1966 ஜுலை மாதத்திற்காக 5-6-66ல் வெளியிடப்பட்டது. | ஸஞ்சிகை 7

## திருவாய்மொழி நூற்றந்தாதி—88

அறுக்குமிட ரென்றவன்பால் ஆங்குவிட்ட தூதர்*
மறித்துவரப் பற்ரு மனத்தால்—*அறப்பதறிச்
செய்ய திருநாவாயில் செல்லநினைந்தான்மாறன்*
மையலினுல் செய்வறியா மல்.

| | | | |
|---|---|---|---|
| இடர் அறுக்கும் என்று | நமது துயரங்களைப் போக்கி யருள்வனென்றுகொண்டு | அற பதறி | மிகவும் விரைந்து |
| அவன் பால் ஆங்கு விட்ட தூதர் | அப்பெருமானைக் குறித்து அங்கே அனுப்பப்பட்ட தூதர் | மையலினுல் | அறிவு கலக்கத்திஞல் |
| மறித்து வர பர்ரு மனத்தால் | மீண்டு வருமளவும் ஆறி யிருக்கமாட்டாத திருவுள் ளத்தாலே | செய்வு அறியாமல் | இன்னது செய்வதென்றறி யாமல் |
| மாறன் | ஆழ்வார் | செய்ய திரு நாவாயில் | விலக்ஷணமான திருநாவாய்ப் பதியை நோக்கி |
| | | செல்ல நினைந்தான் | எழுந்தருள முயன்றூர். |

* * * கீழ்த்திருவாய்மொழியாகிய *எங்கானலில் விடப்பட்ட தூதர் அத்தலைப்பட்டு எம்பெருமானுக்குச் செய்தியறிவித்து மீண்டுவருவதற்குள்ளே ஆழ்வார் மிகவும் பதறித் திருநாவாயிலே செல்ல நினைத்தபடியைக் கூறுவதாம் *அறுக்கும் வினையாயினவென்னும் பதிகம். "திருவடிசென்று பிராட்டியைத் திருவடிதொழுது மீண்டவனந்தரம் பெருமாளைக் கிட்டுவதற்குமுன்பு பிராட்டிக்குப்பிறந்த மனோரதம்போலே, கீழ்விட்ட தூதர் அத்தலைப்பட்டு அவனைக் கொண்டுவருவதற்குமுன்னே நடுவு இவர்க்கு (ஆழ்வார்க்கு)ப் பிறந்த மனோரதத்தைச் சொல்லுகிறது *அறுக்கும் வினை" என்பது நம்பிள்ளையீடு.

இழே தூதுவிட்டதலமான திருமூழிக்களம்போலே திருநாவாயும் மலைநாட்டுத் திருப்பதிகள் பதின்மூன்றில் ஒன்று. 'திருநாவாயில் புகவல்லேனே? புகும்நாள் என்றோ? அங்கேபுக்குக் கண்ணாரக்கண்டு அடிமை செய்யவல்லேனே?' என்றிப்படி பல மனோரதங் களைப் பண்ணுகிறாராய்ச் செல்லுகிறது *அறுக்கும் வினைப்பதிகம். ஈற்றடியில் "செய்வ தறியாமல்" என்று சிலர் ஓதும் பாடம் தவறு; 'செய்வறியாமல்' என்பதே சுத்தபாடம். செய்வு எனினும் செய்வது எனினும் ஒக்கும். ... ... (88)

## 10—5—66 வரை ஸ்ரீ ராமாநுஜனுக்குச் சந்தா செலுத்தியவர்கள்

— மதராஸ் மெம்பர்கள் —

| | | |
|---|---|---|
| 70 | C. V Kasturirangan | 28 |
| 71. | V. R. Ranganathan | 8 |
| 72. | S. G. Rajan | 47 |
| 73. | R. Varadan (அகரம் கண்ணமாசார்) | 17 |
| 74. | M K. ரங்கராமாநுஜன் | 15 |
| 75. | K. P. Subrammanyam | 24 |
| 76. | V C Rangadurai | 10 |
| 77. | R Ramachandran | 4 |
| 78. | K S Champakesayyangar | 5 |
| 79. | வங்கப்பட்டு ரங்காசாரியர் | 4 |
| 80. | E. A கிருஷ்ணராமாநுஜம் | 1 |
| 81. | A. K Rudrakoti | 12 |
| 82. | S. M. Rangasami Iyengar | 5 |
| 83. | T. Ramaswami Iyengar | 5 |
| 84. | Achal Seshachariar | 5 |
| 85. | S. Srirama Iyengar | 4 |
| 86. | P. T. Srinivasan | 17 |
| 87. | Dr R. Sampath (Life Member) | 24 |

— இதரவூர்கள் —

| | | |
|---|---|---|
| 88. | P. T. S. நரஸிம்மன், கீழ்மணிக்கல்பேட் | |
| 89. | T. S கிருஷ்ணய்யங்கார், வள்ளியூர் | |
| 90. | முகுந்தராமாநுஜம், மாறம்பட்டி. | |
| 91. | A. S. அப்பன், அச்சந்தவிழ்த்தான் | |
| 92. | ஸ்ரீநிவாஸராமாநுஜம், மன்னார்குடி | |
| 93 | K. R Aravamudan, Bombay | 19 |
| 94 | பொன்னம்மாள், கொப்புச்சித்தப்பட்டி | |
| 95 | உபயவேதாந்த ப்ரவர்த்தநஸபா Bangalore | 3 |
| 96. | K கோவிந்தசாமிப்பிள்ளை, நாரணமங்கலம் | |
| 97 | P. Ramaswami, திருச்சி | 2 |
| 98. | T N மகரபூஷணமையங்கரர், தென்திருப்பேரை | |
| 99. | P. R. Sourirajan, New Delhi | |
| 100 | நாகப்பபாகவதர், கரந்தை | |
| 101. | துரை ஆஞ்சனேயன், கரந்தை | |
| 102. | மாதுஸ்ரீ கிருஷ்ணராஜ், கடலூர் N T. | |
| 103 | S V. வெங்கடபட்டர், கோமட்டிபல்லி | |
| 104. | ஸ்ரீமத்பரமஹம்ஸ எம்பார் ஜீயர் ஸ்வாமி, ஸ்ரீபெரும்பூதூர் | |
| 105. | A கோபாலையங்கார், ஆமூர் | |
| 106 | பத்மநாபமவர்கள், தஞ்சாவூர் | |
| 107 | T. V. Srinivasachar, Erode | |
| 108. | K N. S ஸ்ரீநிவாஸன், நாலாட்டின்புத்தூர் | |
| 109. | A R சௌரிராஜன், நெப்பத்தூர் | |
| 110. | அர்ச்சகம், கிருஷ்ணய்யங்கார், குடந்தை. | |
| 111. | T. தேப்பெருமாள் செட்டி, ஸ்ரீரங்கம் | |
| 112. | தேவநாதய்யங்கார், ஸகிந்தராபாத் | |
| 113 | பு. கொ. மாசி செட்டியார், கு. புதூர் | |
| 114 | வெ இராமகிருஷ்ணன், கரைமேடு | |

# ஸ்ரீரங்கம் தென்னுசார்ய ஸம்பிரதாய ஸம்ரக்ஷணஸபையின் பொன்விழாக் கொண்டாட்ட நிகழ்ச்சியுகப்பு.

ஏற்கெனவே உலகமெல்லாம் பரவச்செய்திருந்த விளம்பரத்தின்படி திருவரங்கம் பெரிய கோயிலில் ஷ பொன்விழாக் கொண்டாட்டம் 5—5—66 திருவிசாகம் முதல் 8—5—66 திருமூலம்வரையில் நான்குநாள் வெகு சிறப்பாக நடைபெற்றது. இரண்டொரு வேளைகள் நீங்கலாக மற்ற வேளைகளிலெல்லாம் கூடியிருந்து குளிர பாக்கியம் பெற்றேன். இக்கொண்டாட்டத்தில் அந்வயிக்கப்பெற்றவர்களைப்பற்றிச் சுருங்கச் சொல்லில் "ந தே மநுஷ்யா தேவாஸ் தே" என்று தசரத சக்ரவர்த்தி சொன்னதைத்தான் சொல்லவேணு மத்தனை. விளம்பரப் பத்திரிகையில் குறிப்பிட்ட நிகழ்ச்சிகள் மிகமிக மேம்பட்டு நடந்தனவேயன்றி எந்த அம்சத்திலும் சிறிதும் குறைபாடில்லை. உபந்யாஸகோஷ்டியோ திருவீதிப்ரதக்ஷிண கோஷ்டியோ ததீயாராதந கோஷ்டியோ ஒவ்வொன்றும் அநந்வயாலங்கார லக்ஷ்யமாகவேயிருந்தது. திருவீதிகளில் ஸ்தோத்ரபாட யஜுர்வேத ஸாமவேத கோஷங்கள் "அலையாருங்கடல்போல் முழங்கும்" என்ற அருளிச்செயலையே நினைப்பூட்டிக்கொண்டிருந்தன. இக்கொண்டாட்டத்தின் முடிவுநாள் மணவாள மாமுனிகள் திருநக்ஷத்ரமான திருமூலமாக அமைந்ததனுல் அன்று காலையிலிருந்து பகல் மூன்றுமணி வரையில் *த்ரிபாத்விபூதியில் பரிபூர்ணுநுபவத்தை இங்கே பெற்ருேமென்றே ஒவ்வொருவரும் நினைக்கலாயிருந்தது.

ஸ்ரீமத் பரமஹம்ஸேத்யாதி. திருமலை திருப்பதி பெரிய ஜீயர் ஸ்வாமியின் ஆத்யக்ஷ்யத்திலும், ஸ்ரீரங்க நாராயண ஜீயர்ஸ்வாமி, ஸ்ரீகாஞ்சீ. அழகியமணவாள யதீந்த்ரப்ரவண ராமாநுஜ ஜீயர்ஸ்வாமி, ஸ்ரீபெரும்பூதூர் எம்பார் ஜீயர்ஸ்வாமி, திருமெய்யம் ஜீயர்ஸ்வாமி ஆகிய இவர்களின் உபாத்யக்ஷ்யத்திலும் நடைபெற்ற இம்மஹாகோஷ்டி *பொலிக பொலிக பொலிகவென்று போற்றுதற்கேயுரித்தாயிருந்தது.

இப்பெரிய நிர்வாஹத்தில் லௌகிகத் தலைவர்களில் சென்னை பிரபல வியாபாரியான ஸ்ரீமான் நாதெள்ள ஸம்பத்து செட்டியாரவர்கள் மிகமிக ச்ரத்தைகொண்டு பரிபூர்த்தியாக அங்கே உடனிருந்து ஒரு குறையுமின்றி நடத்திவைத்ததற்கு மிகவுகந்தருளின ஸ்ரீகாஞ்சீ அழகிய மணவாள ஜீயர்ஸ்வாமிகள் பரமார்த்த பூஷணமென்கிற பிருதளித்து அவரைச் சிறப்பித்தருளினர். இந்த செட்டியார்தாம் ப்ரக்ருத ஸ்ரீரங்கஸபைக்கு நிரந்தர அக்ராஸனர். இந்த ஸபையின் நித்யகாலக்ஷேப நிர்வாஹகரான ஸ்ரீஉவே. வித்வான். திருமலை அனந்தாண்பிள்ளை, சதாபிஷேகம். கோவிந்தநரஸிம்ஹாசாரியர் இதில் வைதிக கார்ய நிர்வாஹ துரந்தரராயிருந்து ஸகலகாரியங்களையும் பரிமளிக்கச் செய்தனர். மற்றும் ஸ்ரீஉவே மெ. ஸுந்தரராஜாசார்யஸ்வாமி, இளையவில்லி. சடகோபாசார்யஸ்வாமி முதலானுரும் ஒருமிடருகக் கலந்திருந்து ஸகலகார்ய நிர்வாஹங்களையும் குறிக்கொண்டிருந்ததனுல் விலக்ஷண மஹோத்ஸவமென்னப்பெற்ற இக்கொண்டாட்டம் * ந பூதோ ந பவிஷ்யதி யென்னவேண்டும் முறையில் லோகோத்தரமாக நடைபெற்று டைமண்டு ஜுபிளியை யெதிர்பார்த்திருக்கச் செய்கின்றது. ... P. B. A.



# ஸாத்யபக்தி ஸாதநபக்தி சோதனம்

**ஸ்ரீ காஞ்சீ. பிரதிவாதிபயங்கரம் அண்ணங்கராசாரியர்**

திருவாய்மொழியை வெறும் பக்திநூலாக மட்டும் கொள்ளாமல் சிறந்த சாஸ்த்ர க்ரந்தமாகவுங்கொண்ட நம் ஆசார்யர்கள் சாஸ்த்ரங்களை நிர்வஹிக்கிற கட்டளையிலே இதையும் நிர்வஹிக்க விழிந்து பல சர்ச்சைகளைச் செய்தருளுமடைவிலே, முதற்பத்தின் இரண்டாம் பதிகமான *வீடுமின் முற்றத்தையும், பத்தாம்பத்தின் நான்காம் பதிகமான *சார்வேதவ நெறியையும் ஒருவிஷய விசேஷத்திற்கு உபக்ரமோபஸம்ஹாரங்களாக வைத்தருளினார்கள். *வீடுமின் முற்றத்திலே உபக்ரமித்ததுதானே *சார்வேதவநெறியில் நிகமிக்கப்பட்டதாக நிர்ணயித்தருளினார்கள்—என்னுமிவ்விஷயத்தில் யார்க்கும் விஸம்வாதமில்லை; இருக்க ப்ரஸக்தியுமில்லை. 'உபக்ரமித்ததுதானே நிகமிக்கப்பட்ட' தென்று ஸாமாங்யேந சொல்லிவிடுவதில் த்ருப்தி பிறவாதாகையினாலே உபக்ராந்தமின்ன தென்பதை விசேஷித்துத் தெரிவித்தாகவேண்டும். மணவாளமாமுனிகள் திருவாய்மொழி நூற்றந்தாதியில் (94.) *சார்வேதவ நெறிப்பதிகத்திற்கு ஸாரஸம்க்ஷேபமாக இட்டருளின பாசுரத்தில் "சார்வாகவே அடியில்தானுரைத்த பத்திதான்" என்றருளிச் செய்திருக்கையாலே அடியில்தானுரைத்தது பக்திதானென்று நிர்ணயிக்க அருமையில்லை.

ஆக இதனால், *வீடுமின் முற்றத்தில் பக்திதான் உபதேசிக்கத் தொடங்கினதென்பதில்ஐயமில்லையாயிற்று; *வீடுசெய்து மற்றெவையும் மிக்கபுகழ்நாரணன்தாள் நாடு நலத்தாலடைய* என்கிற திருவாய்மொழி நூற்றந்தாதிப் பாசுரத்தில் "நலத்தாலடைய" என்றதற்கு 'பக்தியினாலடைய' என்று பொருளாகையாலே பக்த்யுபதேசத்திலேதான் உபக்ரமம் என்பது இதனாலுமறிய வெளிது. *மயர்வற மதிநலமருளினன்* என்றவிடத்து நலம் என்பது பக்திக்கு வாசகமென்றுணர்ந்தவர்கட்கு இங்கு விவரணாபேக்ஷையில்லை. ஆக உபக்ரமமும் பக்திவிஷயகம், உபஸம்ஹாரமும் பக்திவிஷயகம் என்பது நூற்றந்தாதியினால் நிஸ்ஸந்தேஹ ஸித்தமாயிற்று. அந்த பக்தி ஸாத்ய பக்தியா? ஸாதந பக்தியா? என்பதில்தான் ஐயமுண்டாகிறது என்பர்கள். இந்த ஸந்தேஹத்தின் பரிஹாரம் எப்போது விளையுமென்றால், ஸாத்ய பக்தியின் வேஷத்தையும் ஸாதந பக்தியின் வேஷத்தையும் தெளிவாக அறிந்துகொண்டால்தான் விளையும். இங்கு உண்மையுணர்த்துவோம். பரஸ்பரம் வேறுபட்ட இரண்டு வஸ்துக்களையுத்தேசித்து விகல்பம் நிகழுமேயல்லது வேறுபாடற்ற விஷயங்களைப்பற்றின விகல்பம் ஒருகாலும் விளையமாட்டாது. 'ஸ்தாணுர் வா புருஷோ வா' என்பர்களேயல்லது 'ஸ்தாணுர் வா வ்ருக்ஷோ வா' என்றாவது, 'புருஷோ வா மநுஷ்யோ வா' என்றாவது விகல்பம் உதிக்கவேமாட்டாது. இவ்விடங்களில் சப்தம் பேதித்திருந்தாலும் அர்த்தம் பேதித்திருக்கவில்லையன்றே. அறிஞர்கள் முந்துறமுன்னம் இதை நெஞ்சிலே தேக்கிக்கொள்ளவேணும். 'ஸமாநார்த்தக பதங்களை

யிட்டு விகல்பம் விளையாது' என்று திடமாகத் தேறிவிட்டால் 'ஸாத்ய பக்தியா? ஸாதந பக்தியா?' என்கிற விகல்பமும் ஸம்பவியாதென்னத் தட்டில்லை. பக்தியா ப்ரபத்தியா? என்பர்களேயல்லது, பக்தியா உபாஸநமா? ப்ரபத்தியா சரணாகதியா? என்னமாட்டார்கள்.

ஆனால் ஸாத்ய பக்தியென்பதும் ஸாதந பக்தியென்பதும் வெவ்வேறல்லவோ? ஒன்றுதானோ? என்கிற கேள்வி இனி விளையும். ஆசார்யஹ்ருதயமூலமும் அதற்கு மணவாளமாமுனிகளின் வியாக்கியானமும் கூறியிருப்பதைக் கேண்மின். (99) "ஜன்மாந்தரஸஹஸ்ர நல்தவங்களாலே" என்று தொடங்கும் சூர்ணையின் முடிவு "ஸாத்யஸாதந பக்தியாக சாஸ்த்ரஸித்தம்" என்றுள்ளது. இங்கு (ஸாத்ய) (ஸாதந) என்பவற்றை பக்தியிலே தனித்தனியே கூட்டி 'ஸாத்யபக்தியாகவும் ஸாதநபக்தியாகவும் சாஸ்த்ரஸித்தம்' என்று கூறுவதாகச் சிலரோ பலரோ நினைப்பதுண்டு. அது மிகத் தவறான நினைவு. "வேதநோபாஸந ஸேவாத்யாநாதிகளென்று சொல்லுமது" என்று அவ்யவஹித பூர்வத்திலிருப்பதை நோக்கவேணும். "சேதநஸாத்யமாய் பகவத்ப்ரஸாத நோபாயதயா தத்ப்ராப்திஸாதனமான பக்தியாக" என்று மணவாளமாமுனிகள் விசதமாக விவரித்தருளியிருக்கையாலும் ஸாத்யமான ஸாதநபக்தியென்று பொருளேயல்லது 'ஸாத்ய பக்தியாகவும் ஸாதநபக்தியாகவும்' என்கிற பொருள் சிறிதும் ஏலாது. ஆக, ஸாத்ய பக்தியா ஸாதநபக்தியா? என்கிற விகல்பமே ஏலாதென்று முடிந்தது.

மேலே யெடுத்துக்காட்டினவிடத்தில் மூவகையான பக்திகள் பேசப்பட்டுள்ளன. (1) ஸ்வயத்நஸாத்யையாய் உபாயபூதையான பக்தி முதலது. (2) ஸித்தோபாயத்தை ஸ்வீகரித்தவர்கள் ப்ரார்த்தித்து சரீரவியோகஸமநந்தரம் பெறும் பக்தி இரண்டாவது. (3) உபயவிலக்ஷணமான ஆழ்வாருடைய பக்தி மூன்றாவது. ஆக இம்மூன்று பக்திகளுள் முந்துறமுன்னம் நிர்தேசிக்கப்பட்ட பக்தியையே ஸாத்ய பக்தியென்றோ ஸாதநபக்தி யென்றோ வ்யபதேசிப்பது. ஆதலால், ஸாத்யபக்திபரமா? ஸாதநபக்திபரமா? என்கிற விகல்பசரீரமே பொருந்தாதென்பது மூதலிக்கப்பட்டதாயிற்று. ஸுந்தர தருண புருஷன் என்றால் ஸுந்தரபுருஷன் வேறு, தருணபுருஷன் வேறு என்பதாக எப்படித் தேறமாட்டாதோ, அப்படியே "ஸாத்யஸாதநபக்தியாக" என்கிற ஸ்ரீஸூக்தியினாலும் ஸாத்யபக்தி வேறு, ஸாதநபக்தி வேறு என்பதாகத் தேறமாட்டாதென்பது திண்ணம்.

இனி, விகல்பசரீரத்தை வேறுவகையாக வைக்கிறோம் என்ன வேணும். 'ஸாத்ய பக்திபரமா? ஸாதநபக்திபரமா?' என்கிற விவாதம் அறவே தொலைந்திட்டதென்று முடிந்ததாயிற்று. வேறுவகையாக விகல்பசரீரத்தை எப்படி வைக்கலாமென்று பார்ப்போம். "உபாயபக்தி: ப்ராரப்தவ்யதிரிக்தாகநாசிநீ, ஸாத்யபக்திஸ் து ஸா ஹந்த்ரீ ப்ராரப்தஸ்யாபி பூயஸீ" என்றொரு ப்ரமாணம் ரஹஸ்யத்ரயஸாரத்தில் அபராதபரிஹாராதி காரத்திலும் ப்ரபாவரக்ஷாதிகாரத்திலும் உபாத்தமாகக் காண்கிறது. இங்கு ஸாத்யபக்தி யென்பதற்கு ப்ரபத்தியென்கிற பொருள் கொள்ளப்படுகிறது. இந்த வசனத்தில் ஸாத்ய பக்திக்கும் ஸாதநபக்திக்கும் ப்ரதித்வந்த்விபாவம் மறைக்கமுடியாதபடி விளங்குகை யாலே 'உபாயபக்தியா? ஸாத்யபக்தியா?' என்று விகல்பிப்பதில் அநுபபத்தி யொன்று மில்லையே! என்று சொல்லவுங்கூடும். இங்ஙனே கொள்ளுமளவில் பக்திபரமா? ப்ரபத்தி பரமா? என்று விகல்பிப்பதாகத் தேறுமத்தனை. இந்த விகல்பத்தை ஈடு ஸஹிக்க

மாட்டாது. ஏனெனில், ப்ரபத்திபரமான யோஜநை ஆளவந்தாருடைய ப்ரவசனத்தி லிருந்ததாகவும், எம்பெருமானுருடைய ப்ரவசனத்தில் பக்திபரமான யோஜநை தோன்றிய தாகவும் ஈட்டில் வ்யக்தமாகக் காண்கையாலே ஒருவாறு முடிந்துபோன விஷயத்தில் விஸம்வாதமுதிக்க ப்ரஸக்தியில்லை. 'ப்ரபத்திபரமன்று, பக்திபரந்தான்' என்று அங்கீகரிக்க வேண்டியது அவர்ஜநீயமாயிற்றதாகையாலே பக்தி சோதனத்தில் மட்டுமே இப்போது இழியவேண்டும். இழிந்தால், ஸாதநபக்தி தவிர வேறொன்று வந்துபுகவழியில்லை. மணவாளமாமுனிகளின் ஸ்ரீஸூக்தியினுல் இது விசதமாக விளங்காநின்றது. இதை யெடுத்துக்காட்டித் தெளிவு பிறப்பிக்கிறேன். இதுதான் விவாத சாந்தி பெறுவிக்கும் விஷயம். இதுவே முக்கியமாகக் குறிக்கொள்ளத்தக்கது.

## வீடுமின் முற்றம் உபாயபக்தியைத்தான் சொல்லுகிறது.

"துடிப்பிருக்கக் கைவேகவேணுமோ?" என்றொரு வசனம் பெரியவாச்சான்பிள்ளை காட்டியிருப்பதுண்டு பெரிய திருமொழி (3-7-3) வியாக்கியானத்தில். இந்த ரீதியில் "வீடுமின் முற்றம் பக்திரூப ஸாதநோபதேசபரம்" என்று மணவாளமாமுனிகள் தமது திருக்கரத்தினுல் விந்யஸித்தருளியிருக்கையாலே அந்த ஸ்தலத்தை யெடுத்துக்காட்டி விட்டால் இந்த விவாதம் சாந்தமாயிற்றென்று நிற்கலாம். ஆனாலும் எடுத்துக்கொண்ட விஷயம் எதுவானாலும் அதனை ஆரஅமர ஆராய்ந்து முடிப்பது அடியேன் பணியாதலால் அதற்குச் சேர மிக விளக்கமாக நிரூபித்துத் தலைக்கட்டுகிறேன்.

வீடுமின் முற்றம் ஸாதநபக்திபரமென்று மணவாளமாமுனிகள் அருளிச் செய்திருப்பது எவ்விடத்திலென்னில்; ஆசார்ய ஹ்ருதயத்தில் (195) வேதங்களினுடையவும் வேத வேத்யனை ஸர்வேச்வரனுடையவும் வைதிகர்களான மஹர்ஷிகளினுடையவும் உபதேசம் அஜ்ஞர்களை மட்டுமே நோக்கியதாதலால் ஸங்குசித விஷயமென்றும், ஆழ்வார் அங்ஙனன்றிக்கே அஜ்ஞர்களோடு ஜ்ஞானிகளோடு ஜ்ஞானவிசேஷயுக்தரோடு ஸர்வஜ்ஞனோடு வாசியற எல்லார்க்கும் உபதேசித்தவராகையாலே இவருடைய உபதேசம் அஸங்கோசேந ஸர்வவிஷயமென்றும் நிரூபிக்கத் தொடங்கி மேல் (198-ல்) ஸம்ஸாரிகளுக்கும் ஸர்வேச்வரனுக்கும் செய்தருளின உபதேசமே பெரும்பான்மையானதென்று நிரூபித்தருளுமடைவில் ஸம்ஸாரிகளுக்கான வுபதேசம் வீடுமினென்று தொடங்கி நினைமின் என்று தலைக்கட்டப்படுவதாக மூலத்திலுள்ளது. உபதேச ஸமாப்தி பத்தாம்பத்தில் *கண்ணன் கழலிணைப் பதிகத்திலென்பது திருவாய்மொழி நூற்றந்தாதியிலும் *மண்ணவர்க்குத் தானுபதேசிக்கை தலைக்கட்டினுன் மாறன்* என்பதனுல் நன்கு விளங்கும். அப்பதிகத்தில் *சுனைநன்மலரிட்டு நினைமின்நெடியானே* யென்று நினைமினென்று தலைக்கட்டுகையாலே *வீடுமின் நினைமினென்று ஆசார்யஹ்ருதய மூலத்திலெடுத்துக்காட்டியருளினது மிகப் பொருத்தமானது.

இங்கு முக்கியமான விஷயமேதென்னில், ஸம்ஸாரிகளுக்கும் ஸர்வேச்வரனுக்கும் ஆழ்வார் செய்தருளுமுபதேசம் இவர்களுக்கு ஸாதனத்திலும் ஸாத்யத்திலுமுண்டான கலக்கம் தீருகைக்காக என்றருளிச் செய்யப்பட்டது. ஸம்ஸாரிகளுக்கு ஸாதனத்தில் கலக்கமாவது – 'ஸாதனம் இன்னதென்றறியப் பெருமையாலுண்டான கலக்கம்'

என்று விவரிக்கப்பட்டது. ஆழ்வார் ஜீவர்களுக்கு உபதேசிக்கும் ஸாதனம் இன்னதென்று மூலத்தில் கூறப்படவில்லை. அதைக் கலக்கமின்றிக்கே விவரிக்க வேண்டுவது வ்யாக்யாதாவுக்குப் பணியாயிற்று. பெரியவாச்சான்பிள்ளை வடக்குத் திருவீதிப் பிள்ளைகள் விவரிக்குமதிற்காட்டிலும் விசதவாக் சிகாமணிகள் விவரிக்குமதில் வைசத்யமும் அவத்யலவலேச ராஹித்யமும் விச்வப்ரஸித்தமாகையாலே மாமுனிகள் காட்டியருளும் வைசத்யமே நமக்குக் கைவிளக்காயிருக்கும். ப்ரக்ருத விஷயத்தில் மாமுனிகள் ஏதும் காட்டியருளாமலே - ப்ரஸ்தாவமே செய்தருளாமலே யிருந்து விட்டாராகில் இவ்விஷய சர்ச்சையில் அடியேன் தலையிடவே நேராது. பகல்கண்ட குழியிலே இராவிழுகையன்றிக்கே பகலிலேயே விழுமாபோலே விசதவாக்சிகாமணிகள் இவ்வளவு விசதமாக அருளிச்செய்திருக்கு மிவ்விஷயத்தில் விசார ப்ரஸக்தியே யில்லாமலிருக்க, விசாரங் கொண்டு விபரீத நிர்ணயமும் பண்ணுவது சோசநீயமன்றோ. மேலெடுத்த ஸ்தலத்திலே "வீடுமின் முற்றம் பக்திரூப ஸாதநோபதேசபரம்" என்கிற ஸ்ரீ ஸூக்தி குன்றிலிட்ட விளக்குப்போல் விளங்குவதைக் காணலாம். ரஹஸ்யத்ரய ஸாரத்தில் ஸாத்ய பக்தியென்பதற்குப் ப்பல பக்தி யென்கிற பொருள் காட்டப்பட்டிருப்பதனால் அப்பொருளைக் கொள்ளுகிறோமென்னில், ஸாத்ய பக்தி யென்கிற சொல்வடிவமே ப்ரக்ருத விவாதாஸ்பத ஸ்தலங்களில் காணப்படாமலிருக்க, அதைக் கூட்டிக்கொள்வது தகுதியற்றது. அந்த பக்தி அவரவர்கள் ப்ரார்த்தித்துப் பெறவேண்டியதே யொழிய உபதேசிக்கவுரியதன்றென்பது முக்கியமாகவுணரத் தக்கது. "ஸாத்ய ஸாதந பக்தியாக சாஸ்த்ர ஸித்தம்" என்கிற ஆசார்ய ஹ்ருதய ஸூக்தியை ஆழ்ந்து நோக்குமவர்களுக்கு ஸாத்ய பக்தி யென்பதும் ஸாதன பக்தியென்பதும் பர்யாயமே யென்பது அசைக்கவொண்ணாதபடி விளங்குமென்பது சர்வித சர்வணமாயினும் புந: புந: தெரிவிக்க வேண்டியதேயாகிறது.

நநு, நம் ஸம்ப்ரதாயத்தில் எம்பெருமானைத்தவிர்த்து வேறெதுவும் உபாயமன்று என்று ஸித்தாந்த முள்ளதாகையாலே ஆழ்வார் பக்திரூபமான உபாயத்தை உபதேசித்தருளுகிறாரென்று எங்ஙனே சொல்லலாமென்று கனத்த சங்கை விளையுமிங்கு. இதற்கு ஸாரமாக விஜ்ஞாபிக்கிறேன். சாஸ்த்ரங்களில் கர்த்தவ்யமாக விஹிதமானவற்றில் உபாயத்வமென்பது கழற்றவொண்ணாத தொன்று. இங்கு மருமமென்னவென்றால், பெறும் பேற்றின் கனத்தையும் நாம் செய்யும் உபாயத்தின் புன்மையையும் நோக்குமிடத்து இதை உபாயமாக நினைக்கத் தகாது என்னுமித்தனையே. நம் ஆசார்யர்களின் திவ்யக்ரந்தங்களை நோக்கும்போது இது மிக வெளிதாக விளங்கும். முமுக்ஷுப்படியில் சரமச்லோகத்தில் ஏக சப்தார்த்தம் அருளிச் செய்யுமிடத்து "இத்தால் (வ்ரஜ) என்கிற ஸ்வீகாரத்தில் உபாய பாவத்தைத் தவிர்க்கிறது" என்றுள்ள ஸ்ரீ ஸூக்திக்கு வியாக்கியானமருளிச் செய்யா நின்ற ஸ்வாமி —" இந்த ஸ்வீகாரந்தானும் அந்வயவ்யதிரேகத்தாலே ஸாதனமென்று நினைக்கலாயிருக்கையாலே இதின் ஸாதநத்வம் அவசியம் சுரிக்கவேணுமிறே" என்றார். மேலே "ஸ்வீகாரந்தானும் அவனாலே வந்தது" இத்யாதியான மூலமும், "இத்தால், ஸ்வீகாரத்துச்கு உபாய கார்யத்வ மொழிய உபாயத்வமில்லை யென்றதாயிற்று" இத்யாதி வியாக்கியான ஸ்ரீஸூக்தியும் வடிக்கட்டின சாஸ்த்ரார்த்தம்.

ஸ்ரீ வசநபூஷணத்தில் (58) "உபாயாந்தரம் இரண்டையும் பொறுக்கும்" என்றவிடத்தில் "ஸித்தோபாயேதரமான ஸாத்யோபாயம்—ஸ்வபாரதந்த்ர்ய ஜ்ஞான ரஹித

ராய் ஸ்வயத்நபரராயிருப்பார்க்கு மோக்ஷஸாதநதயா சாஸ்த்ர விஹிதமாகையாலே ஸ்வஸ்மிந் உபாயத்வ ப்ரதிபத்தி ஸஹமாயிருக்கும்'' என்றருளிச் செய்ததுங் காண்க. மேலே (134.) ''ப்ரபத்த்யுபாயத்துக்கு இக்குற்றங்களொன்றுமில்லை'' என்றவிடத்து வியாக்கியான ஸூக்தியுங்காண்க. ஆழ்வாருபதேசிப்பது ஸாதநபக்தி யென்றோ உபாய பக்தி யென்றோ சொல்லுவதனுல் ஸம்ப்ரதாய க்ஷோபலேசமும் வாராது. திருக்கச்சிநம்பி யாறு வார்த்தையில் ''மோக்ஷோபாய: ப்ரபத்திஸ் ஸ்யாத்'' என்றிருப்பதுமுணர்க. இதில் நுட்பமான மருமமுணர்ந்தக் கேண்மின். நெருப்பின் உஷ்ணத்தன்மையானது மணிமந்த்ர ஔஷதாதிகளாலே தடைபெற்றதானுலும் 'நெருப்புக்கு வெப்பம் இயல்வு' என்னத் தட்டில்லையன்றோ. ஒரு தனிகனுன சிஷ்யன் ஸ்வாசார்யனுக்கு விலையுயர்ந்த பீதாம்பர மொன்றை ஸமர்ப்பிக்கிருன். அதின் விலை ஆயிரம் ரூபா விலையுள்ளது. ஸமர்ப்பித்தவன் அதை ஆசார்யன் ஸ்வயம்போக்யமாக வைத்துக்கொண்டு அணியவேணுமென்னு மெண்ணத் தோடே ஸமர்ப்பிக்கிருனேயல்லது இத்தை உபாயமாக்கவேணும் [அதாவது விலைகூறி விற்கவேணும்] என்னுமெண்ணத்தோடு ஸமர்ப்பிக்கிருனல்லன். ஆனுல் அதை உபாய மாக்குவதோ உபேயமாகவே கொள்ளுவதோ பெற்றுக்கொண்டவரின் ருசியைச் சேர்ந்தது. அவர் ஆயிரம் ரூபாய்க்கும் விற்கலாம், ஐம்பது ரூபாய்க்கும் விற்றுவிடலாம். ஸமர்ப்பித்த வஸ்துவில் உபேயத்வம்போலே உபாயத்வமும் உள்ளதே யென்பது மறுக்க முடியாததேயாம். இதேபோல ஆழ்வார் ஸம்ஸாரிகளுக்கு உபதேசித்த பக்தி 'இது இவர்களால் உபாயமாகக் கொள்ளப்படவேணும்' என்னுமெண்ணத்தோடு உபதிஷ்ட மன்று. ஆனுல் அதில் உபாயத்வாகாரம் உள்ளதொன்றேயாம். ஆக *வீடுமின் முற்றத்தில் உபாய பக்தியை யுபதேசிக்கிருரெனினும் பக்த்யுபாயத்தை யுபதேசிக்கிருரெனினும் இழுக் கொன்றுமில்லை. ஆசார்ய ஹ்ருதயம் நான்காம் ப்ரகரணத்தில் ஒன்பதாம்பத்துக்கு ஸார ஸங்க்ரஹமாக இட்டருளின சூர்ணையில் ''கீதாசார்யனைப்போலே அதிகாராநுகுணம் நெறியெல்லாமுரைக்கிருர் ஒன்பதாம்பத்தில்'' என்றுள்ளதையும் அவ்விடத்து வியாக்கி யானத்தையும் உற்றுநோக்குக.

ஈட்டில் ஆழ்வாருடைய பக்தி வேதாந்த விஹிதையான பக்தியா? என்று கேட்டுக் கொண்டு 'அன்று, எம்பெருமானருளால் பெற்ற பக்தி' என்று முடித்திருக்கின்றது. கர்மஜ்ஞானங்களை யனுஷ்டித்து அவ்வழியாலே பெறும் பக்திதான் வேதாந்த விஹிதை யான பக்தியென்பது. ஆழ்வாருடைய பக்தி ஏவம்விதமன்று; பின்னையோவென்னில், கர்மஜ்ஞானங்களின் ஸ்தானத்திலே பகவத்ப்ரஸாதமாய் அதனுல் விளைந்த பக்தி. இது ஸாதனபக்தியே யொழிய வேறன்று. ஒருவன் உத்யோகமோ வியாபாரமோ க்ருஷியோ செய்து பொருள்படைக்கிருன்; மற்றொருவன் இவையொன்றும் செய்யாமல் நிதியைப் பெறுகிருன். இங்ஙனே தனம் பெறும் வழியில் வாசியிருந்தாலும் உத்யோகாதிகளால் பெற்ற தனமும் நிதிமூலம் பெற்ற தனமும் ஒன்றேயாகிருப்போலே கர்மஜ்ஞாநாநுக்ரு ஹீதபக்தியும் பகவத்ப்ரஸாத லப்தபக்தியும் ஒன்றேயாம்; அதாவது உபாயபக்தியேயா மென்றபடி. தமக்கு எம்பெருமான் மயர்வறமதிநலமருளினதுபோல ஆழ்வார் தாமும் ஸம்ஸாரிகளுக்கு மயர்வற மதிநலமருளி பக்தியை உபதேசிப்பதாக *பரபரனுய் நின்ற சூர்ணையிலருளிச் செய்திருக்கையாலே தாம் பெற்ற பக்தியும் உபதேசித்த பக்தியும் ஒன்றேயாயிற்று. ஆக, வீடுமின்முற்றத்தில் ஆழ்வாருபதேசித்தது உபாயபக்தியைத் தானென்பது மணவாளமாமுனிகளின் ஸுஸ்பஷ்ட ஸூக்திகளால் ஸித்தமென்று விஜ்ஞாபித்து நிற்கிறேன். ... ... ... ... ... ✽

ஜீயர் திருவடிகளே சரணம்.

# சென்னை மஹநீயர்கள் மூவர்.



ஸ்ரீமதுபயவே.
K. B. ராஜகோபாலாசாரியர்ஸ்வாமி
(அட்வகேட்)

சென்னைமாநகரில் நம்மவர்களான பெரியார்கள் பலர் விளங்குகின்றனர். அன்னவர்களது திருவுருவப் படங்களைச் சேகரித்து வெளியிடவேணுமென்கிற அடியேனுடைய அவா இப்போதுதான் பயன்பெறத் தொடங்குகின்றது. தற்காலம் மூவருடைய திருவுருவப்படங்கள் கிடைத்தன. இங்கே ஸேவை ஸாதிப்பவர் இளையவில்லி ராஜகோபாலாசாரியர் ஸ்வாமி. இவர் திருவல்லிக்கேணியில் வாழும் பிரபல அட்வகேட். காஞ்சீபுரம் தென்னாசார்ய ஸம்பிரதாய ஸம்ரக்ஷகர்களான வக்கீல்களில் ஒருவர். விசேஷித்து, திருக்குறுங்குடி முதலிய இதர திவ்யதேச வ்யவஹாரங்களிலும் வெற்றி பெறுத்தியவர். இவருடைய திருத்தகப்பனுரையும் அடியேன் நன்கறிவேன். இவருடைய திருக்குமாரர்களும் நல்ல பதவிகளில் விளங்கி வருகிறார்கள். இவர்கள் பல்லாண்டு பல்லாண்டு வாழ வேணுமென்று ஸ்ரீ பார்த்தஸாரதி திருவடிகளில் பிரார்த்திக்கிறேன். ... ...



ஸ்ரீஉவே. ஆசால் சேஷாசாரியர்ஸ்வாமி
(அட்வகேட்)

2. காஞ்சீபுரத்துப் பெரியார்களில் ஸ்ரீஉவே. ஆசால் ராகவாசாரியர் ஸ்வாமியென்பவர் திருநாட்டுக்கெழுந்தருளி இருபத்தைந்து முப்பது வருடங்களானாலும் இற்றைக்கும் பலருடைய நினைவில் விளங்குபவர். அவருடைய திருக்குமாரர்களில் ஒருவரான ஆசால் சேஷாசாரியர்ஸ்வாமி இங்கே ஸேவைஸாதிப்பவர். இவரும் திருவல்லிக்கேணியில் விளங்கும் பிரபல அட்வகேட். இந்த ஸ்வாமியின் திருச்செவியில் விழாத ஸம்ப்ரதாயார்த்தங்களே கிடையாதென்றால் மிகையாகாது. பஹுச்ருதர் என்னும் விருது பெற்றவர். இவருடைய திருக்குமாரர்களும் ப்ரதிஷ்டிதர்களாய் விளங்குகின்றார்கள். இவருடைய குடும்பத்திற்குப் பல்லாண்டு பாடி நிற்கிறேன். ...

# 3. சென்னை லிபர்ட்டிபிரெஸ் தலைவர்.



ஸ்ரீமதுபயவே. T. ஸ்ரீநிவாஸய்யங்கார் ஸ்வாமி (லிபர்ட்டிபிரெஸ் தலைவர்)

சென்னைமாநகரில் பலபல அச்சுக்கூடங்களுண்டு, பெரும்பாலும் ஒவ்வொரு தெருவிலுமுண்டென்று சொல்லலாம். மிகப்பெரிய அச்சுக்கூடங்களென்று மதிக்கக்கூடியவை சிலவேயாம். அவற்றுள் ஒன்று. Liberty Press. ஹைகோர்ட்டு ஸமீபத்திலுள்ள லிங்கசெட்டித் தெருவில் விளங்குவது இவ்வச்சுக் கூடம். இதில் ஸம்ஸ்கிருதம், தமிழ், தெலுங்கு, ஹிந்தி, ஆங்கிலம் முதலான அனேக பாஷைகளில் புத்தகப் பதிப்புகள் மிகச் சிறப்பான முறையில் நடைபெற்று வருகின்றன. நம்முடைய பெரிய புத்தகங்களெல்லாம் பெரும்பாலும் முப்பதுவருஷ காலமாக இவ்வச்சுக்கூடத்தில்தான் பதிப்பிக்கப்பட்டு வருகின்றன. இற்றைக்கும் எம்முடைய திவ்யப் பிரபந்த ஸம்ஸ்கிருத ஹிந்தி வியாக்கியானங்கள் இங்குத்தான் முத்ரணமாகி வருகின்றன. இவ்வச்சுக் கூடத் தலைவரான ஸ்ரீஉவே. T. ஸ்ரீநிவாஸாசாரியர் ஸ்வாமி தமது திருக்குமாரர்களுடனே மிக்க பொறுமையுடனும் பெருமையுடனும் கார்ய நிர்வாஹம் செய்துவருகிறார். இவர்களுக்கு வாழ்த்துக் கூறவேண்டியது அடியேனுக்கு விசேஷித்த கடமையாகும். ... ... 

## ஸ்ரீமத் பரமஹம்ஸ ஸ்ரீமந்நாராயண ஜீயர் ஸ்வாமியின் திக்விஜய யாத்திரை.

இந்த ஜீயர் ஸ்வாமியின் திருநாமத்தை மறந்திருக்கமாட்டீர்கள். சென்ற ஸம்வத்ஸரத்தில் தென்னாடுகளில் அரியபெரிய காரியங்களைச் செய்தவர். திருவரங்கம் பெரிய கோயிலில் ஈடுமஹோத்ஸவம் நடத்திவைத்தவர். சென்னை திருவல்லிக்கேணி காஞ்சீபுரம் முதலான பலவிடங்களில் க்ரதுஸ்தம்ப ப்ரதிஷ்டா பூர்வகமாகப் பல ஸ்ரீராம க்ரதுக்களை நடத்தினவர். குரோதி ஸம்வத்ஸரத்தில் ஆறுமாஸகாலம் தென்னாட்டில் காரியங்களைச் செய்து விசுவாவஸு வருஷத்தின் உபக்ரமத்தில் தெலுங்கு தேசங்களில் ஸஞ்சாரம் தொடங்கினார். ஆங்கே பலவிடங்களில் ஸ்ரீராம க்ரதுக்களும் ஸ்தம்ப ப்ரதிஷ்டைகளும் செய்துகொண்டு ப்ருந்தாவனம் அஜ்மீர் புஷ்கரம் ஜயபூர் பிரயாகை முதலான விடங்

களிலும் வெகு சிறப்பாகச் செய்து தற்காலம் ஸ்ரீ பதரிகாச்ரமத்தில் ஜபஹோமாதிகளை அனுஷ்டித்துக்கொண்டு வருகிறார்.

அவ்விடத்தில் ஏற்கெனவே மிகப்பெரிய ராமாநுஜகூட ஸ்தானம் லோகோத்தர மான ஸந்நிவேசத்தில் நிர்மாணமாகியிருக்கிறது. அதில் பலவகையான பரிஷ்காரங்கள் இப்போது செய்யப்பட்டு வருவதாகப் பத்ரிகைகளில் வாசித்து வருகிறோம். ஸ்வதேசம் பரதேசம் என்கிற வாசியின்றிக்கே எல்லாத்தேசங்களிலும் துல்யமான மதிப்பு இந்த ஜீயர் ஸ்வாமிக்கு ஏற்பட்டு வருகிறது. மேலே விவரித்த ரீதியான காரியங்களிலே இதுகாறும் செலவாகியிருக்கும் பொருள் பல லக்ஷக்கணக்கில் தேறுமென்று மதிப்பிடப்படுகிறது. இவர் விரக்தியினால் ஆச்ரம ஸ்வீகாரம் செய்துகொண்டாரேயொழிய பரம்பரையான வொரு மடத்தைச் சேர்ந்தவரல்லர். ஆனால் இனிமேல் இது பரம்பரையாகவே மடமாக விளங்கி வருமென்று தெரியவருகிறது. நமது தென்னாட்டிலும் வடநாட்டிலும் பரம்பரை யாக மடாதிபதிகள் பலபலர் விளங்கிவருகிறார்களல்லவா? அன்னவர்களில் ஒரு மடாதி பதிக்கும் இப்படிப்பட்ட ப்ரசாரசக்தி வாய்க்கவில்லை. எந்த மதஸ்தரானாலும் வித்வான் களிடத்திலே இந்த ஸ்வாமி காட்டும் அன்பும் ஆர்வமும் வாசாமகோசரம்.

இந்த ஸ்வாமி க்ருஹஸ்தாச்ரமத்திலெழுந்தருளியிருக்கும் போதும் விசிஷ்டாத் வைத மதப்ரசாரத்திலேயே தீக்ஷிதராயிருந்து அப்போதே அப்ரமேயமான காரியங்களைச் செய்துவரத் தொடங்கினவர். ஏறக்குறைய முப்பத்தைந்து ஸம்வத்ஸர காலமாக இந்த ஸ்வாமியோடு பழக்கம் அடியேனுக்கு இருந்துவந்ததனால் இவருடைய ஹ்ருதய பரிபாகத்தை நெடுநாளாகவே அறிவேன். தெலுங்கு தேசத்தில் ஜனித்திருந்தும் திவ்ய ப்ரபந்தமோதி பகவத் விஷயாதிகாரியாயிருந்ததனால் விலக்ஷணமான ராஸிக்யம் பெற்றிருக் கின்றார். "ஸ்மிதபூர்வாபிபாஷி" என்று சக்ரவர்த்தி திருமகனுக்குச் சொல்லப்பட்ட மஹா குணம் இந்த ஸ்வாமிக்கு இயற்கையாகவே அமைந்திருந்தது. ஸ்வார்த்த நிஸ்ஸ்ப்ருஹராய் பரார்த்தைக ப்ரவணராயிருந்துகொண்டு இந்த ஜீயர்ஸ்வாமி எங்கும் எக்காரியத்திலும் வெற்றிபெற்று வருகிறாரென்பது வியக்கத்தக்கதன்று. ... ...

## அவரவர்களினுடைய மனப்பான்மை.

ஈச்வர ஸ்ருஷ்டியை நாம் உற்று நோக்குவோமாயின் வ்யக்தி தோறும் வெவ் வேறுபட்ட தன்மையை நன்கு உணரலாம். காமக்ரோத லோப மோஹ மத மாத்ஸர்ய அஸூயைகளென்று சொல்லப்படுகிற மனோவ்ருத்திகள் எந்த நாட்டிலும் எந்த ஜாதி யிலும் இயற்கையாகவே பரவியுள்ளன. பகவத் கீதையில் பன்னிரண்டாவது அத்யாயம் இருபது சுலோகங்களே கொண்டது. அதில் பதின்மூன்றாவது சுலோகம் முதலான ஏழெட்டு சுலோகங்களில் "ஸ மே ப்ரிய:- ஸ மே ப்ரிய:" [அவன் எனக்கு ப்ரீதி பாத்திரன், அவன் எனக்கு ப்ரீதிபாத்திரன்] என்கிறான் கீதாசார்யன். அவனுக்கு ப்ரீதி பாத்திரனான அவன் எவனென்று கேட்டால், அவன் இந்த வுலகிலிருக்கக் கூடியவனாகத்

தெரியவில்லை. "அத்வேஷ்டா ஸர்வபூதாநாம்" என்று தொடங்கி, ஒரு பிராணியிடத்திலும் பகையில்லாதவனும், பகைவரிடத்திலும் நட்பு கொள்பவனும், பகைவர்க்கு ஒரு துன்பமுண்டானால் தான் துக்கிப்பவனும் அஹங்கார மமகாரங்களற்றவனும் இன்ப துன்பங்களிரண்டையும் ஒரு நிகராக நினைப்பவனும் பொறுமையுடையவனும் கிடைத்த வரையில் த்ருப்தியடைபவனும்......என்று சொல்லிக்கொண்டே போகிறான் கண்ண பிரான். மேலே மேலே சொல்லுமவற்றை அநுவதிக்கவும் அச்சமாயிருக்கிறது. இந்நிலத்தில் எந்த நாட்டிலும் எந்த யோகியினிடத்திலுங்கூட வாய்க்கமாட்டாத தன்மைகளைச் சொல்லிச் சொல்லி 'இப்படிப்பட்டவன் எனக்கு ப்ரியன்' என்று வார்த்தை தோறும் சொல்லுவதைக் கண்டால் நறுமணமுள்ள பொன்தாமரைப்பூதான் எனக்குப் பிரியமானதென்று சொல்லுவது போலல்லவா உள்ளது. *விண்ணுளார் பெருமாற்கு அடிமை செய்வாரையும் செறும் ஐம்புலனிவை* என்று (திருவாய்மொழி 7-1-6.) ஆழ்வாரருளிச் செய்ததை நோக்குங்கால் விண்ணுலகத்திலுங் கூட இத்தகைய அதிகாரிகள் கிடைப்பர்களோ மாட்டார்களோவென்று ஐயுறவேண்டியதாக வன்றோவுள்ளது. ஆனால் இவ்வதிசங்கை நியாயமானதன்று என்று விடுப்போம்.

இனி ப்ரக்ருதமான விவக்ஷித விஷயத்திற்கு வருகிறேன். கீதையில் பன்னிரண்டாமத்யாயத்திலிருந்து உதாஹரிக்கப்பட்ட சுலோகங்களிற்காணும் அதிகாரிகள் துர்லபர்களாயினும் ஸாதாரணமாக இவ்வுலகில் ஸாத்விக ப்ரக்ருதிகள் காணக்கிடைக்காமற் போகவில்லை. சில ஸமயங்களில் ரஜஸ்தமோ குணங்கள் கலசப் பெற்றாலும் கூடிய மட்டில் ஸாத்விகர்களென்று வ்யபதேசிக்கக் கூடிய பல பெரியார்களை நாம் இந்நிலத்தில் பார்த்தே வருகிறோம். அன்னவர்கள் நம்முடைய ஸ்ரீராமாநுஜன் பத்ரிகையை விரும்பி வாசித்துத் தங்களுடைய உள்ளடங்காத மகிழ்ச்சியைத் தெரிவித்து வருகிறார்கள். பிராமாணிகர்களும் ரஸிகர்களுமுள்ளார்களென்று நாமும் மகிழ்ந்து வருகிறோம். சிலர் ஊர்பேரில்லாமல் மொட்டைக் கடிதங்கள் எழுதி அபரிமிதமான நிந்தைகளினால் தாங்கள் ஒருவாறு த்ருப்தியடைந்து வருகிறார்கள். இதர ஸம்பிரதாயஸ்தர்களின் மனத்தைப் புண்படுத்தவே நாம் பத்ரிகை நடத்தி வருவதாகத் தாங்கள் துணிந்து சொல்ல முடியுமென்று எழுதுகிறார்கள். தேவப்பெருமாள் ஸந்நிதி வியவஹாரங்களோடு நில்லாமல் ஸ்ரீரங்க தேவஸ்தான வியவஹாரங்களையும் அநவஸரமாக இழுத்துப்போட்டுக் கொண்டு பழைய ரிகார்டுகளை யெல்லாம் இப்போது வெளியிடுவது அநீதி யென்றும் தெரிவிக்கிறார்கள். இப்படி மஹஜர்நாமா என்று பெயர் வைத்து ஏழெட்டு நபர்களின் கையெழுத்திட்ட காகிதங்களை யனுப்புகிறார்கள். அந்த நபர்கள் யாரென்பதையும் எவ்விடத்தார்களென்பதையும் நாம் தெரிந்துகொள்ளமுடியாமல்தானிருக்கிறது.

இத்தகைய கடிதங்களை நாம் சிலவரிகள் வாசித்தவுடனே கிழித்தெறிவது வழக்கம். எழுதினவர்கள் நமது பத்திரிகைகளையும் நூல்களையும் தொடர்ச்சியாகப் பார்த்து வருவதாகவும் காட்டிக் கொள்ளுகிறார்கள். அவர்கட்கு நாம் இந்த விஜ்ஞாபனம் மூலமாக ஸம்க்ஷேபமான பதில் தெரிவிக்கிறோம். ஒருவருடைய மனத்தையும் புண்படுத்த நமக்குக் கனவிலும் எண்ணம் கிடையாது. தத்துவங்களை யுணர்த்த வேண்டிய காலங்களில் உணர்த்தாதிருக்க மாட்டோம். "ஸ்ரீமந்நாராயண ஏக ஏவ பரம் தத்வம்" என்றெழுதுவதனாலும் அதை விரிவாக நிரூபிப்பதனாலும் சிலருடைய—பலருடைய—மனம் புண்படுகிறதென்றால் அதற்கு யார் என்ன செய்ய முடியும். நான் எழுதும் விஷயங்கள் அஸங்கதமாகவும் அப்ராமாணிகமாகவும் தோன்றினால் அதை ஆர்ஜவத்துடன் விளக்கிக் காட்டி நமக்கு அனுப்பி வைத்தால் அதை நாமே நமது பத்ரிகையில் வெளியிட ஸித்தமாயிருக்கிறோம். ... ... ... ... ❋

ஸ்ரீ:

# வைதிக மநோஹரா—கீதார்த்தஸர்வஸ்வம்

வைதிக மநோஹரா என்னும் பெயரால் அடியேன் நடத்திவரும் ஸம்ஸ்க்ருத மாதாந்தரப்பத்ரிகையில் 14-5-66 தேதியன்று 152 லக்கமுள்ள ஸஞ்சிகை முப்பத்திரண்டு பக்கங்கொண்டது வெளிவந்துள்ளது. இது பூராவும் கீதார்த்தஸர்வஸ்வம் என்கிற ஒரு நூலைக்கொண்டது. இதைப்பற்றிச் சுருக்கமாகத் தெரிவிக்கிறேனிங்கு. 8—4—66 பங்குனி விசாகத்தில் அடியேனுடைய எழுபத்தைந்து பிராயப்பூர்த்தியை முன்னிட்டு ஸ்ரீ வைஷ்ணவ ஹஸ்தபூஷணம் என்னுமொரு நூலையியற்றி அந்நாளில் வெளியிட்டேன். எழுபத்தைந்து உபந்யாஸங்களை அதில் உலகம் வாசித்திருக்கின்றது. எழுபத்தைந்து வினுவிடைகளென்னும் நூலை இந்த ஸ்ரீ ராமாநுஜன் வெளியிடுகின்றமை காண்க. பஞ்சஸப்ததி பரமார்த்தரத்னம் என்னும் பெயரால் எழுபத்தைந்து நல்வார்த்தை [சிறு சிறு உபந்யாஸங்கள்] விரைவில் வெளிவரப்போகின்றமை காண்பீர்கள். ராஜமன்னூர் ஸன்னிதிக்கடுத்த சேனங்குளத்திலெழுந்தருளியிருக்கும் ஸ்ரீஉவே. ராகவாசாரியர்ஸ்வாமி நடத்திவரும் ஞானவொளியென்னும் மாதப்பத்திரிகைக்கு விஷயதானம் செய்ய நேர்ந்தது. அதனால் மேலே சொன்ன பஞ்சஸப்ததி பரமார்த்தரத்னத்தை அந்தப் பத்திரிகைக்கு அளித்தேன். அதில் வெளிவரக் காண்பீர்கள். நண்பர்கள் அதன் தன்மையைச் சிறிது தெரிந்துகொள்வதற்காக (Sample வகையில்) ஸ்வல்பபாகம் இதில் வெளியிடப்படுகிறது. (அது மேலே காண்க.)

இவற்றினிடையில் முன்னம் ப்ரஸ்தாவித்த கீதார்த்த ஸர்வஸ்வமென்பது வடமொழியிலமைந்ததொன்று. இதன் உபக்ரமத்தில்,

> பஞ்சஸப்ததிவய:ப்ரபூர்த்திபாக் தாஸ ஏஷ தநுதே ஸதாம் முதே,
> பஞ்சஸப்ததிமஹார்த்தஸஞ்சயம் நந்தநந்தநமுகோத்தசாஸ்த்ரத:-

என்கிற சுலோகமிட்டேன். (இதன் பொருளாவது) எழுபத்தைந்து பிராயப் பூர்த்தியை யடைகின்ற அடியேன் கண்ணபிரானருளிச்செய்த பகவத் கீதா சாஸ்த்ரத்திலிருந்து எழுபத்தைந்து சிரிய பொருள்களையிட்டு இந்நூலையியற்றுகின்றேனென்கை. இந்த நூல் சுலோகரூபமாக இயற்றப்பட்டது. வெறும் சுலோகமாகவிருந்தால் பொருள் விளங்குவது அருமைப்படுமென்று வடமொழியிலேயே (வசனரூபமாக) வியாக்கியானமுமியற்றி "கீதார்த்த ஸர்வஸ்வம்—ஸவ்யாக்க்யாநம்" என்று வெளியிட்டிருக்கிறேன். எழுபத்தைந்து சுலோகங்களில் இதனை முடிக்கவேணுமென்று ஸங்கல்பித்துத் தொடங்கினதாயினும், பதினொரு அத்யாயங்களின் மஹார்த்தங்களே எழுபத்தைந்து சுலோகங்களில் அடங்கின. ஆகவே 75-க்கு மேலும் சுலோகங்கள் இயற்றவேண்டி நேர்ந்தது. அவ்விடத்தில் *உத்திஷ்டபத்யஸங்க்யா யத்யப்பவஸாநமாபத் அங்கூநா, புநரபி கீதா சார்யேணு நிஷ்ட: பஞ்சவிம்சதிம் வச்மி* என்றொரு சுலோகமியற்றி மேலே தொடர்ச்சி கொண்டேன். அதாவது, உத்தேசித்த சுலோக ஸங்கியை குறைவின்றிப் பூர்த்தியாய்

விட்டாலும் விவக்ஷிதார்த்தங்கள் சேஷித்திருக்கையாலே இன்னமும் இருபத்தைந்து சுலோகங்கள் இயற்ற கீதாசார்யனுடைய நியமனம் பெற்றேனென்றபடி. அந்த நியமனத்தின்படியே நூறு சுலோகங்களில் கீதார்த்தஸர்வஸ்வம் பூர்த்தி செய்யப்பட்டது.

இந்நூலை ஸஹ்ருதயர்கள் பலரும் வாசித்து உள்ளம் பூரித்து விடுத்திருக்கும் திருமுகங்கள் பல. அவற்றுள் இரண்டு ஸ்ரீமுகங்கள் மட்டும் இங்குப் பிரசுரிக்கப் படுகின்றன;—

### 1. ஸ்ரீமதுபயவே வித்வான் கோயம்புத்தூர் வேதவ்யாஸபட்டர் திருமலை ஐயங்கார் ஸ்வாமியின் ஸ்ரீமுகம். (24–5–66)

வைதிக மனோஹராவின் 152-வது ஸஞ்சிகை கிடைத்தவுடனே ஒரேமூச்சில் கீதார்த்த ஸர்வஸ்வக்ருதியை வியாக்கியானத்தோடுங்கூட ஸேவித்து முடித்தேன். ஆனால் ஒருமுறை வாசித்து த்ருப்தியடையக்கூடிய நூலன்று இது. ஆளவந்தார் கீதார்த்தஸங்க்ரஹம் அதிஸம்க்ஷிப்தமாக அருளிச்செய்திருந்தும் அதை அத்யயன அத்யாபனஸரணியில் கொண்டுவருபவர்கள் மிகச் சிலரேயுள்ளதாகத் தெரிகிறது. இந்த கீதார்த்த ஸர்வஸ்வம் ஸம்ஸ்க்ருத பண்டிதர்களுள்ள நாற்றிசையிலும் பரவியிருக்குமாதலால் ஒவ்வொரு பண்டிதரும் இந்நூலை நல்லமுறையில் உபயோகப்படுத்திப் பயனடைவார்களென்றே நம்புகிறேன். கீதாபாஷ்யத்திலும் அதன் தாத்பர்ய சந்திரிகையிலும் முக்கியமாக எடுத்துணரவேண்டிய விஷயங்களெல்லாம் இந்த ஸவ்யாக்க்யானமான நூலில் பெரும்பாலும் வெளிவந்துவிட்டனவென்றே சொல்லலாம். இந்த நூலை தேவரீர் இயற்றியதாக அடியேன் கொள்ளவில்லை. கீதாசார்யனே பேரருளாளனாக வடிவெடுத்திருந்து பணித்ததாகவே அறுதியிடுகிறேன். இந்த க்ரந்தத்தை ஆழ்ந்து வாசித்து அநுபவிக்கும் நிர்மத்ஸரரான ஒவ்வொரு மஹானும் இப்படியே கருதுவர்களென்பதில் ஸந்தேஹமில்லை. இதைத் தமிழிலும் மொழிபெயர்த்து வெளியிட்டால் உலகுக்கு மஹோபகாரமாயிருக்கும். ... ... ...

### 2. ஸ்ரீமதுபயவே (சென்னை) ராவ்ஸாஹிப் S. ராகவையங்கார் ஸ்வாமியின் ஸ்ரீமுகம் (25—5—66)

தேவரீருடைய வைதிக மனோஹராவில் வெளிவந்த "கீதார்த்தஸர்வஸ்வம்— ஸவ்யாக்க்யானம்" பரமபோக்யமாய் அநுபவித்து உள்ளம் குழைந்தேன். தாத்பர்ய சந்திரிகையுடன் கூடிய பகவத் ராமாநுஜ கீதா பாஷ்யத்தின் சிறப்புகளையும் போக்யதையையும் தேவரீர் தமிழில் பலநூல்களில் வெளியிட்டிருப்பவைகளைத் தமிழுலகம் அநுபவித்து ஆனந்தமடைந்திருக்கிறது பகவத் ராமாநுஜ பாஷ்யத்திலுள்ள சிறந்த பொருள்களை இதர பாஷ்யங்களிலோ மற்றுஞ்சிலர் செய்திருக்கிற வியாக்கியானங்களிலோ அநுபவிக்க ப்ராப்தமாகாது. ஸம்ஸ்க்ருத ஞானமுள்ளவர்களில் கீதாபாஷ்ய தாத்பர்ய சந்திரிகைகளை ஆழ்ந்து அநுபவித்து ரஸங்களை க்ரஹிப்பவர்கள் துர்லபர்களென்றே சொல்லவேண்டும். அப்படிப்பட்டவர்களும் தேவரீருடைய இந்த நூலினால் மிக்க பயன் பெறுவர்களென்பதில் ஐயமில்லை. ஸம்ஸ்க்ருத பண்டிதர்களான வேதாந்திகளுக்கு இந்நூல் அபூர்வமான விருந்து என்றே சொல்லவேண்டும். தேவரீருடைய ஸம்ஸ்க்ருத நூல்களெல்லாவற்றிற்கும் இது சிகரமாய் விளங்கும்படி கீதாசார்யன் ஸங்கல்பித்து விட்டான். ஸம்ஸ்க்ருதவுலகமெங்கும் இது பரவவேண்டுமென்பது அடியேனுடைய அவா.

பேரருளாளன் பெருந்தேவித்தாயார் திருவடிகளே சரணம்.

ஆழ்வாரெம்பெருமானார் ஜீயர் திருவடிகளே சரணம்.

# பஞ்சஸப்ததி பரமார்த்தரத்னம்.

## ஸ்ரீ காஞ்சி. பிரதிவாதிபயங்கரம் அண்ணங்கராசாரியர் எழுதியது.

1. "நோயற்ற வாழ்வே குறைவற்ற செல்வம்" என்றிருக்குமவர்கள் நோயற்ற வாழ்ச்சியின் பொருட்டு நித்தியமும் மருத்துவனுக்குக் கைகாட்டவேண்டும். அவர் சொல்லுகிறபடியே நடந்துவரவேண்டும். அவர்க்குப் பணம் தரவேண்டும். நோய் உடலுக்குப்போல ஆன்மாவுக்குமுண்டு. ஆன்மாவும் நோயற்று வாழவேணுமானுல் இதற்காகவும் மருத்துவனை நாடவேண்டும். உடல் மருத்துவன் பணம் பெற்றுக் கொண்டு பொய் பித்தலாடகம் பேசி வஞ்சனைகள் செய்வான். உயிர் மருத்துவன் நம்மிடம் பணம் எதிர்பாராததோடு வேண்டும் ஸமயங்களில் நமக்குப் பணம் தருவன். இந்த மருத்துவனுக்கு நாம் கைகாட்டவேண்டாம். அவனுடைய கையை நாம் காண வேணும். "அஞ்சேலென்று கைகவியாய்" என்று வேண்டி அவனது அபயமுத்திரை யோடு கூடிய திருக்கையை நாம் காணவேணும். மருத்துவன் சொல்லுகிறபடி நாம் கேட்டு அப்படியே நடந்துகொள்ளவேணுமென்பது இங்குமுண்டு. ஆனுல் இந்த மருத்துவன் மனம் போனபடியே புதிது புதிதாக ஏதும் சொல்லமாட்டான். வெகு நாளைக்கு முன்னமே தன் கட்டளைகளை யெழுதி வைத்திருக்கிறுன்; அதன்படி நாம் நடந்துகொள்ளவேண்டும்.

2. உடல் மருத்துவர்கள் ஒருவரிருவரல்லர்; பல்லாயிரவருளர். ஊர்தோறும் வீதிதோறும் பலபலருளர். உயிர் மருத்துவன் ஒருவனே. அவனைத்தான் *மருத்துவனுய் நின்ற மாமணிவண்ணு !* என்று பெரியாழ்வாரழைக்கிறுர். *வைத்யோ நாராயணோ ஹரி:* என்று வைதிகர்கள் சொல்லுவர்கள். ஸஹஸ்ரநாமத்தில் (நிர்வாணம் பேஷஜம்) *பிஷக்* என்று பிஷக்காகச் சொல்லப்படுகிறுன். உடல் மருத்துவன் மருந்தென்று ஒன்றைக் கொடுத்து அதற்காகவும் பணம் பிடுங்குவன். இந்த உயிர் மருத்துவன் தானே மருந்தாயுமிருப்பன். *மருந்தும் பொருளுமமுதமுந்தானே* என்கிறுர் பேயாழ்வார். *நிர்வாணம் பேஷஜம்* என்கிறது ஸஹஸ்ரநாமம். *மருந்தே நங்கள் போக மகிழ்ச்சிக் கென்று பெருந்தேவர் குழாங்கள் திருநாட்டிலே பிதற்றிக்கொண்டிருப்பதாக நம்மாழ்வா ரருளிச் செய்கிறுர். திருநாட்டிலும் மருந்துவேண்டியிருக்கிறது. இதன் மருமத்தை மற்றொருகால் விவரிப்போம்.

3. நம்மாழ்வார் நினைவு வந்தபடியாலே அவருடைய அற்புதமானவோர் அருளிச் செயல் நினைவுக்கு வருகிறது. உலகத்தில் நோயாளிகளை நோக்கி வினவுமவர்கள் "யார் வைத்யர் ? எது மருந்து ?" என்று கேட்பர்களே தவிர 'ஆர் மருந்து ?' என்று ஒருவரும் கேட்கமாட்டார்; கேட்பதில்லை. மருந்தென்கிற வஸ்து அசேதனமாகையாலே 'எது மருந்து ?' என்றுதான் கேட்கக்கூடியது; அப்படித்தான் கேட்டுவருகிறுர்கள். நம்மாழ்

வாரோவென்னில், திருவாய்மொழியில் (7—1—5) *ஆர்மருந்தினியாகுவார் ?* என்கிருர். "ஆர்மருத்துவராகுவார்" என்ருராகில் பொருத்தமாயிருக்கும். ஆர்மருந்தாகுவாரென்றது விலக்ஷணப்ரயோகமாகவன்றோவுள்ளது. ஆழ்வார் அசேதனமான மருந்தைக்கொள்பவரல்லர் என்பது இதனுல் விளங்கிற்றன்ரோ. கைகால் முளைத்த மருந்துதான் உயிர் நோயைத் தீர்க்கும் மருந்தாகும். சுடராழி சங்கேந்தியிருக்கும் மருந்தையே நம்மாழ்வார் நாடுகிருர். நம்மாழ்வாரைச் சேர்ந்த நாமும் அதையே நாடுவோம்.

4. நோய்கள் ஒருவகைப்பட்டிருக்கையன்றியே பலவகைப்பட்டிருப்பதை யறியாதாரில்லை. ஒவ்வொரு நோய்க்கும் மருத்துவர்கள் பலபலருளர். ஒரு நோய்க்கு ஒன்றுதான் மருந்து என்பதும் கிடையாது. சிரங்கு என்கிற ஒரு சிறு நோய்க்கு எத்தனை மருந்துகள் பார்த்துவருகிருேம்! பெரியாழ்வார் ஒரு நோயை யெடுத்துக்கூறி இதற்கு மருந்தறிந்தவன் ஒருவனேயுளன், வேறுயாருமிலர் என்கிருர் ஒரு பாசுரத்தில். அந்தப் பாசுரம் தெரியுமோ? *எருத்துக் கொடியுடையானும் பிரமனுமிந்திரனும், மற்றுமொருத்தரும் இப்பிறவியென்னும் நோய்க்கு மருந்தறிவாருமில்லை* என்பதாம். சிவனும் பிரமனு மிந்திரனும் முதலான எந்தத் தெய்வமும் பிறவியாகிற நோய்க்கு [ஸம்ஸாரவியாதிக்கு] மருந்தறியமாட்டாதென்ருர். பின்னை அறியுந்தெய்வம் ஒன்றுமில்லையோவென்ன, திருமாலிருஞ்சோலை மலையுறையுந் தெய்வமே மருந்தறியுந் தெய்வமென்று தலைக்கட்டினுர்.

5. மலைப்பிராந்தத்தில்தான் ஸித்தௌஷதங்கள் விளையுமென்று கூறுவர்கள். ஆகவே இந்த மருந்தும் மருத்துவனும் திருமாலிருஞ்சோலைமலையில்தானுள்ளதாகக் கண்டுபிடித்தனர் பெரியாழ்வார். மிகுந்த ஆபத்தென்று மருத்துவனிடம் ஓடிச் செல்லுமவர்கள் 'ஐயா! ஒன்றும் பயமில்லையா? உங்கள் வாயினுல் பயமில்லையென்று ஒரு சொல் சொல்லிவிட்டால் போதுமையா!' என்பர்கள். அப்படியே மருத்துவனுய் நின்ற இந்த மாமணிவண்ணனை நோக்கியே (அடுத்த பாசுரத்தில்) *அஞ்சேலென்று கைகவியாய்* என்று பிரார்த்திக்கிருர் பெரியாழ்வார். உண்மையில் இந்த மாமணிவண்ண மருத்துவன் அஞ்சேலென்று கைகவித்தால் ஏழேழ் பிறவிக்கும் அஞ்சவேண்டியதேயில்லை. *போர்த்த பிறப்பொடு நோயொடு மூப்பொடு இறப்பிவை பேர்த்துப் பெருந்துன்பம் வேரறநீக்கித் தன்தாளின் கீழ்ச்சேர்த்து அவன் செய்யுஞ்சேமத்தை யெண்ணுவாரில்லையே!

6. ஸர்வஜ்ஞனன எம்பெருமானுங்கூட மருந்தறியப்பெருத ஒரு வியாதியுண்டு. அஃது இன்னதென்று தெரியுமா? எடுத்துக்காட்டினுல்தான் தெரிந்துகொள்ளமுடியும். நாம் எடுத்துக்காட்டுவதற்குமுன்னே அவரவர்களே சிறிது ஆலோசித்துப்பார்த்துத் தெரிந்துகொள்க. நாமேயெடுத்துக் காட்டுகிருேம். வடமொழியில் அஸூயையென்றும் தென்மொழியில் பொருமையென்றும் சொல்லப்படுவதொன்றுண்டே; இது மனிதர்களுக்கு மிகப்பெரிய வியாதி. உண்மையில் இதற்கு மருந்தே கிடையாது. உலகத்தில் அவரவர்களுக்குப் பெருமைகளைப் பகவான் அருள் செய்கிருன். குலத்தாற்பெருமை, தனத்தாற்பெருமை, அழகினுற்பெருமை, கல்வியினுற்பெருமை.........என்னும்படியான பெருமைகளை மனிதன் தன் முயற்சியினுல் பெறமுடியாது. எம்பெருமானருள் ஒன்றினுல் தான் பெறமுடியும். இவை பெற்றவர்களைக்கண்டு நாம் உகக்கவேணுமேயல்லது பொருமைப்பட்டுப் பயனில்லை. ஆனுல் பொருமைப்படுகிருேம். இது மருந்தில்லாத வியாதியே.

---

இந்நூல் பூர்த்தியாக ஞானவொளிப் பத்திரிகையில்தான் வெளிவரும்.

ஸ்ரீ:
பேரருளாளன் பெருந்தேவித்தாயார் திருவடிகளே சரணம்

    

ஆழ்வாரெம்பெருமானுர் ஜியர் திருவடிகளே சரணம்.

### ஸ்ரீ காஞ்சீ. பிரதிவாதி பயங்கரம் அண்ணங்கராசாரியர் எழுதிய

# எழுபத்தைந்து வினு விடைகள்

## —— அடியேன் செய்யும் விண்ணப்பம் ——

நிகழும் விசுவாவஸுஷு பங்குனி விசாகத்தன்று (8—4—1966) அடியேனது எழுபத்தைந்து பிராயப் பூர்த்தியை முன்னிட்டு எழுபத்தைந்து விண்ணப்பங்கள் கொண்ட ஸ்ரீ வைஷ்ணவஹஸ்தபூஷணமென்று சென்ற ஸ்ரீராமாநுஜனில் வெளியிடப்பட்டது. பகவத் கீதையின் ஸாரார்த்தங்களை எழுபத்தைந்து சுலோகங்களால் [வியாக்கியானத்தோடுங்கூட] விவரித்து கீதார்த்தஸர்வஸ்வமென்கிறஸம்ஸ்க்ருதக்ருதியொன்று வைதிகமனோஹராமூலமாக வெளியிடப்பட்டது. மூன்ருவதாக எழுபத்தைந்துவினுவிடைகளென்னும் இந்தச் சிறுநூல் இப்போது ஸ்ரீ ராமாநுஜன் மூலமாக வெளியிடப்படுகின்றது ஸ்ரீவைஷ்ணவ ஸம்பிரதாய நூல்களிலும் மற்றும் இதிஹாஸபுராணுதிகளிலும் நூதனப்ரவேச முள்ளவர்கள் ஸாரயாகத் தெரிந்துகொள்ளவேண்டிய விஷயங்கள் இதில் வினு விடைகளாக அமைக்கப்படுகின்றன. ஆஸ்திகர்கள் ஆதரிக்கும் உயர்ந்த நூல்களில் இக்காலத்தவர்கள் செய்யும் பல துர்வாதங்களுக்கு ஸமாதானங்களும் இந்த வினுவிடையில் வெளிவரும். எனவே, விடைகளோடு கூடிய எழுபத்தைந்து வினுக்கள் கொண்டது இச்சிறு நூல் என்றதாயிற்று. ஒரு பெரியவர்க்கும் மற்றொரு சிறியவர்க்கும் நடக்கிற ஸம்பாஷணையென்று கொள்க. முன்னுரை முற்றும். •

1. வினு:— ஸ்வாமிந்! ஆழ்வார்களில் ஒருவரைப் பெரியாழ்வாரென்கிறோம்; அவருடைய நிஜமான திருநாமம் விஷ்ணுசித்தரென்றும் பட்டநாதரென்றும் சொல்லப்படுகிறது. பெரியாழ்வாரென்கிற திருநாமம் எதனுல் அவர்க்கு ஆயிற்று? ஆழ்வார்களுள் அவர் மூத்தவருமல்லர்; நம்மாழ்வார் திருமங்கையாழ்வாரைப் போலே ஆயிரக்கணக்கான பாசுரங்களைப் பாடினவருமல்லர். ❋ பொய்கையார் பூதத்தார் பேயார் புகழ்மழிசையையன் அருள்மாறன்

சேரலர்கோன் துய்யபட்டநாதனென்று ஆழ்வார்களின் திருவவதாரக்ரமத்தில் இவ்வாழ்வார் ஏழாமவர்; ஆகவே பிராயத்தினுல் பெரியவரல்லர்; இவர் அருளிச்செய்த பாசுரங்கள் நானூற்றுச் சொச்சம் பாசுரங்களே யாதலால் ஆயிரக்கணக்கான பாசுரங்கள் பாடினவருமல்லர்; அப்படியிருக்க, எதனுல் இவரைப் பெரியாழ்வாரென்கிறது? (விடை) இதற்கு உரிய ஸமாதானம் உபதேச ரத்தினமாலையில் ''மங்களா சாசனத்தில் மற்றுள்ளவாழ்வார்கள், தங்கள் ஆர்வத்தளவு தானன்றிப்—பொங்கும் பரிவாலே வில்லிபுத்தூர்ப்பட்டர்பிரான் பெற்ருன், பெரியாழ்வா ரென்னும் பெயர்.'' என்கிற பாசுரத்தில் வெளிவந்துள்ளதுகாண். எம்பெருமானைக்கண்டவாறே அவனிடத்துத் தமக்கொரு நன்மையைக் கோலாமல் அவன் அபாயமொன்றுமின்றி வாழ்ந் திருப்பதையே தமக்குப் பெருத்த நன்மையாகக்கொண்டு பல்லாண்டு பாடினபெருமை இவர்க்கு மட்டுமே அஸாதாரணமாக இவருடைய சரிதையில் காண்பதனுல் இதையிட்டு இவர் பெரியாழ்வாரெனப்பட்டார். ... .... ... .... ....

2. வினு:— ஸ்ரீராமாயணத்தில் பேசப்படுகிற ஜடாயு மஹாராஜரை நம் ஆசாரியர்கள் **பெரிய வுடையார்** என வழங்கிவருகின்ருர்களே; ஸ்ரீவசன பூஷணத்தில் ''பெரியவுடையாரும் பிள்ளை திருநறையூரரையரும் உடம்பையுபேக்ஷித்தார்கள்'' என்னும் சூர்ணையில் பெரியவுடையா ரெனப்படுபவர் ஜடாயுமஹாராஜர்தானே; எதனுல் அவர்க்குப் பெரியவுடையாரென்று திருநாம மாயிற்று? (விடை) அவர்க்கும் இதுவே காரணந்தான். ஸ்ரீராமாயணத்தில் சக்ரவர்த்தி திருமகனுர்க்கு மங்களா சாஸனம் செய்தவர்கள் பல பலருளரெனினும் இந்த ஜடாயு மஹாராஜ ருடைய மங்களாசாஸனந்தான் தலைசிறந்ததாயிற்று, அதாவது—பெருமாள் பிராட்டியைப் பிரிந்து தேடத்தகாத விடங்களிலும் தேடிக்கொண்டு வருவதைக்கண்ட ஜடாயு தாம் முமூர்ஷு வாயிருக்கச் செய்தேயும் தம்முடைய ரக்ஷையில் கண்ணேட்டமின்றிக்கே **''யாம் ஓஷதிமிவ ஆயுஷ்மந்! அந்வேஷஸி மஹாவநே''** என்று பெருமாளை **ஆயுஷ்மந்!** என்று விளித்த துண்டே இது மிகச்சிறந்த மங்களாசாஸனம். நீர் தீர்க்கமான ஆயுள் பெற்று வாழவேணு மென்பதே அந்த விளியின் கருதது. அந்த ஸமயத்தில் இங்ஙனேயிவர் மங்களாசாஸனம் செய்யவேதான் இராமபிரான் உயிர்தரிக்கப் பெற்ருரென்பது நம் ஆசாரியர்களின் நிர்வாஹம். இதையிட்டே அவரைப் பெரியவுடையாரென்றது. .... .... ... ✽

3. வினு:— பெரியாழ்வாரென்கிற திருநாமத்திற்கு தேவரீர்ஸாதித்த காரணம் தவிர வேருெரு காரணமும் கேட்டிருந்ததுண்டு; நினைவுக்கு வரவில்லை; தேவரீருக்குத் தெரிந் திருக்குமே; அதையும் ஸாதிக்கக் கேட்க விரும்புகிறேன். (விடை) ஆமாம்; வேருெரு நிர்வாஹமுமுண்டு. வேதாந்தவாசிரியர் கோதாஸ்துதியில் ***தாதஸ் து தே மதுபித:*** என்கிற சுலோகத்தில் ஆண்டாள் சூடிக்களைந்த மாலையை நித்தியமும் எம்பெருமானுக்கு உபஹரித்து வந்ததனுல் பெரியாழ்வாரென்கிற திருநாமம் பெற்ருர் என்று கூறியுள்ளார்; ''த்வந்மௌலிகந்த ஸுபகாம் உபஹ்ருத்ய மாலாம் லேபே மஹத்தர பதாநுகுணம் ப்ரஸாதம்'' என்பது அந்த ஸ்ரீஸூக்தி. இதில் மஹத்தரபதமென்றது பெரியாழ்வா ரென்பதை நோக்கியே. இப்படியும் ஒரு நிர்வாஹமுண்டென்று கொள்வதில் குறையொன்றுமில்லை. ... .... .... ✽

4. வினு:— இப்படி இரண்டு நிர்வாஹங்கள் சொல்லக்கூடிய இடம் மற்ருென்று காட்டியருள முடியுமா? (விடை) காட்ட முடியாமலென்ன? திருவெஃகாவி லெம்பெருமான் வடமொழியில் **யதோக்தகாரீ** என்றும், தென்மொழியில் சொன்னவண்ணஞ் செய்த

பெருமாளென்றும் திருநாமம் பெற்றிருக்கிருரன்ரோ? யார் சொன்னபடி செய்தவர்? என்று கேள்விவரின், ஸரஸ்வதியால் நேர்ந்த வேள்வித்தடையைப் போக்கித்தர வேணுமென்று பிரமன் பிரார்த்தித்த படியே செய்தவர் என்றும், "பைந்நாகப்பாய் சுருட்டிக்கொள்" என்றும் "விரித்துக்கொள் என்றும் திருமழிசைப்பிரான் சொன்னபடியே செய்தவர் என்றும் இருவகை யாகவும் நிர்வஹிப்பதுண்டன்ரோ. .... .... .... ...

5. வினு:— இப்போது தேவரீர் ஸாதித்ததில் ஒருசங்கை;- ஸ்ரீயதோக்தகாரி யெம்பெருமான் தையில் மகத்தன்று கண்டருளும் பைந்நாகம்பாய்சுருட்டியுத்ஸவத்தைப் பற்றி ஒரு ஸந்தேஹம. அசல மூர்த்தியான அர்ச்சாவதாரப் பெருமாள் திருமழிசைப்பிரானைப் பின்சென்று தானும் எழுந்து போனுரென்றும், அவர் மீண்டவாறே தானும் மீண்டாரென்றும் கதை சொல்லுவதும், அதை ஒரு உத்ஸவமாக நடத்திக் காட்டுவதும் பரிஹாஸ்யமென்று சிலர் சொல்லுகிருர்களே; இதில் தேவரீருடைய திருவுள்ள மென்ன? (விடை) தேசிகர் ஸாதித்த வேகாஸேது ஸ்தோத்ரமென்கிற ஸ்ரீயதோக்தகாரி ஸ்தோத்ரத்தில் ஆரும் சுலோகத்தில் இவ் வைதிஹ்யம் வெகு சமத்காரமாக அநுஸந்திக்கப் பட்டுள்ளது. "ப்ரத்யாதிசந்தி பவஸஞ்சரணம் ப்ரஜாநாம் பக்தாநுகந்துரிஹ யஸ்ய கதாகதாநி" என்பது அந்த சுலோகம் இதன் கருத்தாவது, யதோக்தகாரி யெம்பெருமான் பக்தனைப் பின்சென்று, போவதும் வருவதுமான ஸஞ்சாரம் செய்தருளினபடியை யநுஸந்தித்தால் அஸ்மதாதிகளுக்கு ஸம்ஸார காந்தாரத்தில் போவது வருவதான ஸஞ்சாரம் தொலையுமென்கை. மஹாமேதாவிகளான பூருவர்களுக்குத் தோன்ருத அநுபபத்திகளன்ரோ இக்காலத்து விமர்சகர்களுக்குத் தோன்றுகின்றன.

6. வினு:— அடியேன் ஸந்தேஹங்கொண்டு கேட்கும் விஷயங்களை அடியேன் ஸொந்தமாகக் கேட்பதாய்க் கருதக்கூடாது. ஆங்காங்குப் பலர் பேசிவருகின்ற குதர்க்கங்களை தேவரீரிடத்தில் விஜ்ஞாபிக்கிறேனித்தனை. தேசிகர் சொல்லியிருக்கிருர், மற்ருெருவர் சொல்லியிருக்கிருர் என்று தேவரீர் விடைகூறினுல் இதனுல் ஆக்ஷேபகர்களுக்கு ஸமாதான மாய்விடுமா? இதை நன்கு திருவுள்ளத்தில் கொண்டு விடைதரவேணும். (விடை) இதை நான் தெரிந்து கொள்ளாமலில்லை. நாம் நம் பூருவாசாரியர்களை வ்யாஸபராசராதி மஹர்ஷிகளுக்கும் மேலாகக் கொள்ளுமவர்கள்; அந்த பூருவர்கள் தமிழ் வசனமாக ஏதேனும் எழுதிவைத்திருந்தால் அதில் ஏதேனும் ப்ரக்ஷிப்தமாயிருக்குமோ வென்று சங்கிக்க இடமுண்டு. உலகமெங்கும் கண்டபாடமாக வைத்துக்கொண்டு அநுஸந்தானம் செய்துவரும் சுலோகபத்தமான நூல்களில் அவ்வாறு சங்கிப்பதற்கு இடமே கிடையாது. அந்த நூல்கள் 600, 700 வருஷங்களாக எவ்வித ஆக்ஷேபணையுமில்லாமல் விளங்கி வரும்போது அவற்றில் அவிச்வாஸம் கொள்ளுமவர்களி ருந்தால் அவர்களைப்பற்றி நமக்குக் கவலையேவேண்டா. அன்னவர்களைத் தெளிவுபடுத்த நம்மாலாகாது; நம்மைப்படைத்தவனுலுமாகாது. ... .... ...

7. வினு:— திருமங்கையாழ்வார் நாகப்பட்டினத்தில் ஸுவர்ணமயமாயிருந்த ஜைந பௌத்த விக்ரஹங்களை ஹரித்துக் கொண்டுவந்து ஸ்ரீரங்க பிராகார மண்டபாதி நிர்மாண கைங்கர்யத்தில் உபயோகித்தார் என்று குருபரம்பராப்ரபாவத்தில் எழுதப்பட்டுள்ள சரித்திரம் மிகவும் அநீதியான வரலாறென்றும் ப்ராமாணிகர்களாய் யோக்யர்களாய்ப் பரம பக்தர்களான ஆழ்வார்கள் இப்படி அநீதியான செயல்களைச் செய்தார்களென்று எழுதிவைப்பது நமது பரம பாவனமான மதத்திற்கு இழுக்காகும்" என்றும் சிலர் வாதிக்கிருர்களே; தமிழ் வசனநூல்களில் பின்னோர்களால் சேர்க்கப்பட்டதென்கிருர்களே. (விடை) பட்டர் ஸ்ரீரங்கராஜ ஸ்தவத்தில்,

*ஜிதபாஹ்ய ஜிநாதிமணி ப்ரதிமா அபி வைதிகயந்நிவ ரங்கபுரே, மணிமண்டப வப்ரகணும் விததே பரகால கவி: ப்ரணமேமஹி தாந்* என்கிற ச்லோக ரத்நத்தில் நிஸ்ஸந்தேஹமாகப் பொறித்து வைத்த திருமங்கையாழ்வாரது சரித்திரத்தை அநியாயக் கதையென்று சொல்லி விட்டால் இதை ஸ்ரீவைஷ்ணவ வுலகம் ஏற்குமா? அந்த ச்லோகம் பிற்காலத்தவர்களால் கற்பிக்கப்பட்டு பட்டர் ஸ்ரீஸூக்திமத்யே புகுத்தப்பட்டதென்று நெஞ்சினாலும் நினைக்கமுடியாதே. இவ்வளவு கம்பீரமான ச்லோகம் பட்டர் தவிர வேறொரு வ்யக்தியால் நிரூமிக்க முடியுமா? ஏறக்குறைய ஆயிரம் வருஷங்களுக்கு முன்பு அவதரித்த இந்த ச்லோகத்தைக் காற்கடைக் கொண்டு, நெஞ்சில் தோன்றினபடியெல்லாம் பேசுமவர்களைப் பற்றி நமக்கென்னகவலை? *

8. **வினா:—** திருவாய்மொழியில் (9-10-5) "சரணமாகும் தனதாளடைந்தார்க் கெல்லாம், மரணமானால் வைகுந்தம் கொடுக்கும்பிரான்" என்கிற பாசுரத்தில் ஓர் ஐதிஹ்யம் ஆங்காங்குள்ளவர்கள் சொல்லி வருகிறார்கள். அதாவது, "மரணமாக்கி வைகுந்தம் கொடுக்கும் பிரான்" என்று ஆழ்வார் திருவாக்கில் பாடம் வெளிவந்திருந்ததாகவும், ஸ்ரீமந்நாதமுனிகள் போல்வார் அதைக்கண்டு "இப்படியிருந்தால் எம்பெருமான் திருவடிகளில் யாரும் பணிய மாட்டார்கள்; வந்து சேர்ந்தவர்களையெல்லாம் மரணமாக்கி வைகுந்தம் கொடுக்குமவனென்று தேறினால் யாரும் அணுகமாட்டார்களன்றோ; ஆகவே இப்பாடத்தை மாற்றியேயாகவேண்டும்" என்று துணிந்து "மரணமானால்" என்று திருத்திப் பாடம் வழங்கலாயினர்என்பதாகவும் ஐதிஹ்யம் சொல்லக் கேட்கிறோம். இது உண்மைதானா? **(விடை)** இது ஸம்ப்ரதாய நெறியிற் படிந்த பெரியார்களுக்கு உடன்பாடன்று. **மரணமாக்கி**யென்று பாடமிருந்திருந்தால் அதைமாற்ற வேண்டிய அவசியமில்லை. அப்படி மாற்றுவதானால் மற்றும்பல பாசுரங்களையும் மாற்றவேண்டி வரும். திருவாய்மொழியிலேயே இரண்டாம்பத்தின் முடிவு பாசுரம் "அருளுடையவன்தாள் அணைவிக்கும் முடித்தே" என்பது; இதில் 'முடித்து' என்பதற்கு மரணமாக்கி யென்பதன்றோ பொருள். அதை மாற்றாமல் இதை மாத்திரம் மாற்றுவானேன்? அன்றியும், ஆழ்வார் திருவாக்கில் 'மரணமானால்' என்கிறபாடமே வெளிவந்ததாக ஸகல பூர்வாசாரியர்களும் நன்குகாட்டி வியாக்கியானஞ் செய்துள்ளார்கள். *மாலை நண்ணி* என்கிற திருக்கண்ணபுரப் பதிகத்தி லன்றோ *மரணமானாலென்கிறவிந்தச் சந்தையுள்ளது, அப்பதிகத்திற்கு இந்தச்சொல்லே உயிரானதென்று கொண்டு வியாக்கியானம் செய்தருளியுள்ளார்கள். "சரீராவஸானத்திலே உம்முடைய விருப்பம் நிறைவேற்றக்கடவோம்" என்று ஆழ்வாரை எம்பெருமான் ஸமாதானம் பண்ணினதாகவும், அதை ஆழ்வார் "மரணமானால் வைகுந்தங் கொடுக்கும்பிரான்" என்று தம்முடைய வநுஸந்தானத்தாலே வெளியிட்டதாகவும் பதிகத்திற்கு ப்ரவேசம் அருளிச் செய்துள்ளார்கள் பாசுர வியாக்கியானத்திலும் "இப்பாட்டில் மரணமானாலென்றதைத் கொண்டிறே கீழ்ச்சொன்ன நிரூபணமெல்லாம்" என்று இருபத்துநாலாயிரத்திலும் முப்பத்தாறு யிரத்திலுமுள்ளது. மணவாளமாமுனிகளும் திருவாய்மொழி நூற்றந்தாதியில் இப்பதிகத்தின் ஸாரமாக இட்டருளின பாசுரத்தில் "மால் உமது வாஞ்சைமுற்றும் மன்னுடம்பின் முடிவில், சால நண்ணிச் செய்வனெனத் தானுகந்து" என்றருளிச் செய்துள்ளனர். ஆசார்ய ஹ்ருதயத் திலும் (4-9.) "இனிப்பத்திலொன்று தசமதசையிலே பேறென்று.......நாளிடப் பெற்றவர்" என்றுள்ளது. ஆழ்வார்க்கு எம்பெருமான் நாளிட்டுக் கொடுத்ததாகவும் அதை ஆழ்வார் தம் திருவாக்கால் அநுவதிப்பதாகவுமன்றோ வஸ்துஸ்திதியில் ப்ரமேயமுள்ளது. ஆகவே "மரண மாக்கி வைகுந்தங் கொடுக்கும்பிரான்" என்று பாடமிருந்ததாக ப்ராமாணிகர்கள் நெஞ்சால் நினைக்கவும் நியாயமில்லையென்று சுருக்கமாகத் தெரிவித்தபடி. .... .... .... *

9. வினு:— "தென்னத்தியூரர் கழலிணைக்கீழ்ப் பூண்டவன்பாளனிராமானுசன்" என்று நூற்றந்தாதியி லருளிச்செய்யும்படியாக எம்பெருமானுக்குத் தேவப்பெருமாள் திருவடியிணையில் அன்புமிகுந்திருப்பதற்கு உரிய காரணமொன்று ஸாதிக்கவேணும். (விடை) திருவரங்கம் பெரியகோயிலில் ஸ்ரீவைஷ்ணவ தர்சன துரந்தரராக வாழ்ந்துவந்த ஆளவந்தார் காஞ்சீபுரியில் வாழும் ஸ்ரீராமாநுஜருடைய ப்ரபாவங்களைக் கேட்டு இவரைக் காண வேணுமென்னுமாவலுடனே காஞ்சிக் கெழுந்தருளி ஸ்ரீஹஸ்திகிரியிலே மங்களாசாஸனஞ் செய்து கீழே திருப்புற்றினருகே திருவனந்தாழ்வானையும் கரியமாணிக்கப் பெருமாளையும் ஸேவியாநிற்க. அங்கே யாதவப்ரகாசர் தம்வித்யார்த்திகளின் ஸமூஹத்துடனே பெருமாளை ஸேவித்து அவ்விடத்தே ப்ரதக்ஷிணமாக வாராநிற்க, ஆளவந்தார் தம் அருகேயிருந்த திருக்கச்சி நம்பியை நோக்கி 'இத்திரளிலே இளையாழ்வார் யாவர்?' என்று கேட்க, அவரும் 'அதோ சிவந்து நெடுகிஆஜாநுபாஹுவாய் வருகிறார்' என்று காட்ட, ஆளவந்தாரும் திருவுள்ளம் பூரிப்பக் குளிரநோக்கியருளி "ஆம் முதல்வனிவன்?' என்று விசேஷகடாக்ஷம் செய்தருளியும், தேவப்பெருமாளை நோக்கி *யஸ்ய ப்ரஸாதகலயா பதிர: ச்ருணோதி பங்கு: ப்ரதாவதி ஜவேந ச வக்தி மூக:; அந்த: ப்ரபச்யதி ஸுதம் லபதே ச வந்த்யா தம் தேவமேவ வரதம் சரணம் கதோஸ்மி *என்றொரு ச்லோகத்தால் இளையாழ்வார் நம் தர்சன ஸ்தாபகராம்படி அருள் புரிகைக் காகச் சரணாகதி செய்தும் எழுந்தருளினரென்று இதிஹாஸம். ஆக, தேவப்பெருமாளுடைய திருவருளடியாகவே ஸ்வாமி விசேஷ அபிவிருத்தியை யடைந்ததனுலேயென்று கொள்க.

10. வினு:— அடியேன் வேறேரு காரணம் கேள்விப்பட்டிருக்கிறேன அதையும் ஸாதிக்கலாமோ? (விடை) யாதவப்ரகாசருடைய கங்காயாத்திரையிலே ஸ்வாமியும் அந்வயித்து எழுந்தருளுகையில், விந்தியாடவியில் நிர்ஜலமும் நிர்ஜனமுமான நீள் காட்டிலே பிரிந்து திரும்ப வேண்டியதானபோது *ஆவாரார்துணையென்று அலைநீர்க்கடலுளழுந்தும் நாவாய் போல் துளங்கி நின்று வழிதிகைத்து நிற்கையிலே, தேவப்பெருமாள் ஒரு வில்லியாகவும் பெருந்தேவித் தாயார் அவனது மனைவியாகவும் வேடம்பூண்டு ஸ்வாமிக்குத் துணையாக வந்து சேர்ந்து வழி நடத்தி ஓரிரவிலேயே கச்சிப்பதியில் கொணர்ந்து சேர்த்துச் சாலக்கிணற்றில் ஸ்வாமி திருக்கையால் தீர்த்தம் வாங்கிப் பருகி விடாய் தீர்ந்ததற்கு அறிகுறியாக அன்று முதல் ஸ்வாமி நாடோறும் சாலக்கிணற்றில் நின்றும் தீர்த்தம் கொணர்ந்து ஸமர்ப்பித்து வந்தார்; இவ்வைதிஹ்யத்தை யதிராஜஸப்ததியில் *வந்தே தம் யமிநாம் துரந்தரமஹம்* என்கிற ச்லோகத்தில் **தத்தம் யேந தயாஸுதாம்புநிதிநா பீத்வா விசுத்தம் பய: காலே ந: கரிசைலக்ருஷ்ண ஜலத: காங்க்ஷாதிகம் வர்ஷதி*** என்ற உத்தரார்த்தத்தில் பொறித்தருளினர் வேதாந்த வாசிரியர். இதுவும் ஒரு காரணந்தான்; யஜ்ஞமூர்த்தி யென்னுமொரு மாயாவாதிஸந்யாஸியின் கேள்விகளுக்கெல்லாம் ஸ்வாமி விடையளித்து வருகையில், முடிவாக வொரு விஷயத்திற்கு விடை யிறுக்கமுடியாமல் 'நாளைக்கு ஆகிறது' என்று சொல்லி வந்து மிகவும் வியாகுலராய் அமுது செய்யாமலே திருக்கண்வளர்ந்தருளாநிற்க, அன்றிரவு தேவப்பெருமான் கனவிலே யெழுந்தருளிக் காட்சிதந்து மாயாவாதியின் வாயடங்கும்படியான சில அர்த்த விசேஷங்களை ஸ்புரிக்கச் செய்து மறைய, ஸ்வாமி உள்ளந்தேறி அந்த யஜ்ஞமூர்த்தியைத் திருத்திப் பணி கொண்டு. தேவப்பெருமாளுடைய ப்ரஸாதமடியாகவே இவர் ஆட்பட்டாரென்கிற உபகார ஸ்மிருதி உலகப்ரஸித்தமாம்படி **அருளாளப் பெருமாளெம்பெருமானுர்** என்று அவர்க்குத் திருநாமம் சாத்தியருளினர். இவ்விதிஹாஸமும் தென்னத்தியூரர் கழலிணைக்கீழ் அன்பு பூண்டிருப்பதற்கு உபபாதகமாகும். .... ... .... .... *

11. வினு:— அசோகவனத்திலிருந்த பிராட்டி திருவடிமூலமாகப் பெருமாளுக்குச் செய்தி சொல்லியனுப்பினுள். அதைப்பெருமாளிடம் விண்ணப்பம் செய்யாநின்ற திருவடி, *ஜீவிதம் தாரயிஷ்யாமி மாஸம் தசரதாத்மஜ* *ஊர்த்வம் மாஸாந்ந ஜீவேயம்* என்று சொன்னதையும் விண்ணப்பஞ் செய்தான். 'இனி ஒருமாத மளவுந்தான் ஜீவித்திருப்பேன், அதற்குமேல் ஜீவித்திருக்கமுடியாது' என்று பிராட்டிசொன்ன வார்த்தை. இப்படி சொல்லக் கேட்ட பெருமாள் "அப்படியா? என்னைப்பிரிந்த பிராட்டி இன்னமும் ஒரு மாதம் வரை ஜீவித்திருப்பளா? அப்படி ஒரு மாதம் ஜீவித்திருந்தாளாகில் நீடூழிகாலமும் ஜீவித்திருக்க வல்லவளே. என்னுல் அப்படி ஜீவித்திருக்க முடியாது; [*ந ஜீவேயம் க்ஷணமபி விநா தாம் அஸிதேக்ஷணும்*] குவளையங்கண்ணியான அப்பிராட்டியை விட்டு ஒரு நொடிப் பொழுதும் ஜீவிக்ககில்லேன் நான்" என்று கூறியிருக்கிருர். இவ்விரண்டு வார்த்தைகளையும் சேர்த்து ஆராயுமிடத்து விச்லேஷத்தில் தரியாமையென்னும் விஷயத்தில் பிராட்டிக்குத் தாழ்வும் பெருமாளுக்கு ஏற்றமும் ஏற்படுகிறதல்லவா? இது கூடுமோ? *அகலகில்லேனிறையு மென்று அலர்மேல்மங்கையுறைமார்பா* என்று ஆழ்வாருளிச் செய்தபடி ஒரு நொடிப்பொ ழுதும் அகலகில்லேனென்று சொல்லுபவள் பிராட்டியல்லவா? அப்படிப்பட்டவளன்றே 'ந ஜீவேயம் க்ஷணமபி' என்று சொல்லவேண்டும். அவள் ஊர்த்வம் மாஸாத் ந ஜீவேயம் என்று ஒரு மாதம் விச்லேஷத்தை ஆற்றியிருக்கமுடியுமென்பதும் 'ந ஜீவேயம் க்ஷணமபி' என்று க்ஷணகாலமும் பிரிவாற்றகில்லேனென்று பெருமாள் சொல்லுவதுமாக வான்மீகி முனிவர் வசந விந்யாஸம் செய்திருப்பது நன்ருயில்லையே. (விடை) மேலே யெடுத்துக்காட்டிய திவ்ய தம்பதிகளின் வசனங்களை ஆழ்ந்து நோக்குமிடத்துப் பிராட்டிக்கே பெருமை விளங்கும். எங்ஙனே யென்னில்; பிராட்டியின் திருமேனியழகைக் காட்டிலும் பெருமாள் திருமேனியழகு மிகவும் குறைந்த தென்பது இங்குத் தெரியவருகிறது. பிராட்டியின் திருமேனியழகெல்லாம் ஒரு தட்டாய், கண்ணழகு மாத்திரமே ஒரு தட்டாயிருக்கையினுலும், அதுதானும் *பும்ஸாம் த்ருஷ்டி சித்தாபஹாரியென்று பேர்பெற்ற இராமபிரானது ஸௌந்தரியத்திற்காட்டிலும் வீறு பெற்றிருக்கையாலும் அப்படிப்பட்ட பிராட்டியின் க்ஷணகாலவிச்லேஷமும் அஸஹ்யமென்பது பெருமாளுடைய திருமுகப் பாசுரத்தினுல [விநா தாம் அஸிதேக்ஷணும் என்பதனுல்] வெளி வந்து பிராட்டியின் பெருமையை நிலைநாட்டி நின்றது. ஒரு மாஸம் பிரிவாற்றியிருப்பேனென்ற பிராட்டியின்வார்த்தை இதற்குப் பிரதிகோடியாய் பெருமாளைப் பிரிந்து ஒரு மாதம் ஜீவித்திருக்க முடியுமென்று சொன்ன முகத்தால் பெருமாளுடைய வடிவழகு அவ்வளவு சிறந்த தன்றென்பது காட்டிற்ருகிறது. .... .... .... .... ....

12. வினு:— அடியேனுடைய வினுவுக்கு இது நேர்மையான விடையாகத் தோன்ற வில்லையே. எம்பெருமானுடைய க்ஷணகாலவிச்லேஷத்தையும் ஸஹித்திருக்கமாட்டாத பிராட்டி தன்வாக்கினுல் ஒருமாத காலம் பிரிவையாற்றியிருக்க முடியுமென்று தெரிவித்தது கூடுமா? என்றன்றே அடியேன் வினவினேன். அதற்கு விடை வரவில்லையே [விடை) இதை நான் தெரிந்துகொள்ளாமலில்லை பிராட்டி திருவாக்கிலிருந்து இவ்விதமான வசன வ்யக்தியை வெளியிடுவித்த வான்மீகி முனிவருடைய கருத்து பிராட்டியின் கண்ணழகு அதிவிலக்ஷணமானது என்பதை வெளியிடுவதற்காகவேயென்று கொள்ளாய். .... ....

13. வினு:— எம்பெருமானுக்கு உபாயத்வமும் உபேயத்வமுமாகிற இரண்டு தன்மைகளுண்டானுப்போலே பிராட்டிக்குப் புருஷகாரத்வமும் உபேயத்வமுமாகிற இரண்டு

தன்மைகளுண்டு. எம்பெருமானுடைய நாராயணத்வ ப்ரயுக்தமான ஸ்வாபாவிக ஸம்பந்தத்தைத் தெரிந்துகொண்டு அவனை ஆச்ரயிக்கும்போது இவளைப் புருஷகாரமாக முன்னிடவேண்டிய அவசியம் என்ன? (விடை) குளிர்ந்த ஜலத்திலுங்கூடக் கொடிதான நெருப்பு கிளருமா போலே ஸர்வபூத ஸுஹ்ருத்தான அவன் திருவுள்ளத்திலே, சேதநன் அளவுகடந்து பண்ணும் அபராத மடியாகச் சீற்றம் பிறப்பதுமுண்டே; அங்ஙனே சீற்றம் பிறந்தால் அவ்வபராதத்தைப் பொறுப்பது இப்பிராட்டிக்காகவே. தன்னுடைய உபதேசாதிகளாலே அச்சீற்றத்தை யாற்றி தயையை ஜனிப்பிக்குமவள் பிராட்டி. ஆகையாலே ஸம்பந்தவுணர்ச்சி யுள்ளவனுக்கும் அபராத பயத்தாலே புருஷகார புரஸ்கரணம் அவசியமேயாகும். .... .... *

14. வினு:— பிராட்டியின் புருஷகாரம் அவ்வளவு காரியம் செய்யுமா? விபலமாகாதா? (விடை) *அகில ஜகந்மாதரம்* என்கிறபடியே சேதநர்க்கு இவள் மாதாவாய் அந்த ஸம்பந்த மடியாக இவர்களது வருத்தங்கண்டு பொறுத்திருக்கமாட்டாதேயிருக்கிற வொரு தன்மையும், எம்பெருமானுக்குப் பத்நியாய் *பித்தர் பனிமலர்மேல் பாவைக்கு* என்கிறபடியே அவன் தன் வைலக்ஷண்யத்தைக் கண்டு பிச்சேறித் தன் சொற்படி நடக்கும்படி அபிமத விஷயமாயிருக்கிற வொரு தன்மையும் உடையளாகையாலே இவளுடைய புருஷகாரம் ஒருவகையாலும் விபலமாகமாட்டாது. ... .... .... .... .... *

15. வினு:— விபலமாகமாட்டாதென்று எதுகொண்டுகெட்டியாகச் சொல்லுவது? (விடை) உலகில் புருஷகாரம் செய்பவர்களுக்கு இரண்டு தன்மைகள் வேண்டும்; எவர் விஷயத்தில் புருஷகாரம் செய்யவேணுமோ அவர் விஷயத்தில் நெஞ்சார்ந்த அன்பு இருக்க வேண்டியது ஒன்று; யாரிடத்தில் புருஷகாரம் செய்யவேணுமோ அவரிடத்தில் தம் வாக்கு வெற்றிபெற்றே தீரும்படியான வால்லப்யமிருக்கவேண்டியது மற்றொன்று. இவ்விரண்டும் பிராட்டியிடத்தே புஷ்கலமென்பது நிர்விவாதமான விஷயம். .... ... *

16. வினு:— இதெல்லாம் உண்மையே; ஈச்வரனே கேட்பாரற்ற ஸ்வதந்திரன்; அன்னவன் சேதநருடைய குற்றங்களை நிறுத்து அவற்றுக்குத்தக்கபடி தண்டனை செலுத்தியே தீர்வேன் என்று நிற்குமளவில் பிராட்டி தான் என்ன செய்யமுடியும்? (விடை) இது இவளுடைய செய்தியறியாதார் செய்யும் ஆக்ஷேபமாகும். இவள் ஸீதையாகப்பிறந்து சிறையிருந்த காலத்தில் இவளைப் பத்து மாதம் இடைவிடாது படாத பாடுகளும் படுத்தின ராக்ஷஸிகளின் கொடுமையை முன்னம் மரத்தின்மேல் மறைந்திருந்து கண்ட அனுமான் 'பெருமாள் வெற்றி பெற்ற பின்பு இவர்களைப் பார்த்துக்கொள்வோம்' என்று ஆறியிருந்து ராவண வதமான பின்பு ஓடிவந்து 'இவ்வரக்கிகளின் அபராதங்களைக் கணக்கிட்டு சித்திரவதம் பண்ண நினைத்திருக்கு மெனக்கு இடமளிக்கவேணும்' என்று (பிராட்டியை நோக்கிக்) கேட்டவளவிலே, சொல்மிறுங்கனுன அவ்வனுமானையுமுட்பட இவள் உபதேசத்தாலே பொறுப்பித்தாளென்பது ஸ்ரீராமாயண ப்ரஸித்தம். அப்படிப்பட்ட விவள் *அல்லி மலர் மகள் போகமயக்குக்களாகியும் நிற்குமம்மான்* என்கிறபடியே தன் போக்யதையிலே மிகவும் ஈடுபட்டிருப்பவனுய் *நின்னன்பின் வழிநின்று சிலைபிடித்தெம்பிரானேக* என்கிறபடியே 'மாயா மிருகத்தின் பின்னே போ' என்றாலும் விளைவதறியாதே அதின் பின்னே தொடர்ந்து போமவனுய் இப்படி தனக்கு விதேயனுய் ரஸிகனுயிருக்குமவனைப் பொறுப்பிக்கவல்லளென்பது பற்றிக் கேட்கவேணுமோ?

17. வினு:— நாம் எம்பெருமானை ஆச்ரயிப்பதற்கு ஏதேனும் காலம் பார்க்க வேண்டியதுண்டோ? (விடை) த்வயத்திலுள்ள ஸ்ரீமச்சப்தத்தினுல், புருஷகார பூதையான பிராட்டியும் ஈச்வரனுமான இருவருடையவும் சேர்த்தியானது எப்போது முண்டென்று காட்டப் பட்டதாகும். ஞானம் ஆனந்தம் முதலியவை எப்படி எம்பெருமானுக்கு ஸ்வரூப நிரூபகங்களோ அப்படி ஸ்ரீபதித்வமும் நிரூபகமாகையாலே இவளோடே கூடியே ஈச்வர ஸத்பாவமென்று கொள்க. சேதனர்களின் அபராதங்களைக் கணக்கிட்டு தண்டிக்கவல்லவனுன எம்பெருமா னுடைய ஸ்வாதந்திரியத்தையும், சேதநர் செய்யும் குற்றங்களின் மிகுதியையுங் கண்டு 'ஐயோ? என்னுகுமோ!' என்கிற பயத்தாலே எம்பெருமானை விட்டு ஒரு நொடிப்பொழுதும் அகலமாட்டாள். இப்படி இவளிருந்து நோக்குகையாலே ஈச்வரனுடைய ஸ்வாதந்திரியததைக் கண்டோ தன்னுடைய அபராதங்களை நினைத்தோ சேதநன் அஞ்சவேண்டிய ப்ரஸக்தியில்லை. ஆக, பிராட்டியானவள் எப்போதும் எம்பெருமானேடு கூடியே யிருக்கின்ருளென்று தெரிந்து கொள்ளுமளவில் எந்த ஸமயத்திலும் எம்பெருமானை ஆச்ரயிக்கலாமென்பது தேறி நிற்கும். 'புருஷகாரம் செய்பவள் அருகே யிருக்குங்காலம் பார்த்து ஆச்ரயிக்கவேணும்' என்று ஸமய ப்ரதீக்ஷை வேண்டியதில்லை; ஆச்ரயிக்கவேணுமென்கிற ருசி பிறக்கவேண்டுவதத்தனையே.

18. வினு:— திருவடியென்று வழங்கப்படுகிற அனுமான் *அன்று சராசரங்களை வைகுந்தத்தேற்றிப் பெருமாள் தன்தாமமேவின காலத்தில் பரமபதம் சென்று சேர்ந்தவர்தானே; அப்படியிருக்க, அவர் இன்னமும் இந்த விபூதியிலேயே இருப்பதாகச் சொல்லப்படுகிறதே, இது ப்ராமாணிகமாகுமோ? (விடை) இதில் என்ன ஸந்தேஹம்? அந்த அனுமான்தானே *ஸ்நேஹோ மே பரமோ ராஜந்! த்வயி நித்யம் ப்ரதிஷ்டித:, பக்திச் ச நியதா வீர! பாவோ நாந் யத்ர கச்சதி.* என்று சொல்லி தான் பரமபதத்திற்கு வருவதை மறுத்து விட்டதாக உத்தர ஸ்ரீராமாயணத்தில் சொல்லப்பட்டிருக்கிறதே. "பரமபதத்தின் பேர் சொல்லுகைதானும் அஸஹ்ய மாகையாலே (அந்யத்ர) என்கிருர் என்று நம் ஆசாரியாகள் அருளிச்செய்துமிருக்கிருர்களே.

19. வினு:— 'உத்தர ஸ்ரீராமாயணம் பிராமாணிகமன்று, கல்பிதம்" என்றும் "உத்தரகாண்டம் யாரோ எழுதி ராமாயணத்துடன் சேர்ந்தே போயிற்று" என்றும் ஒரு பெரியார் பிரசாரம் செய்து வருகிருரே; இதைப்பற்றி உம்முடைய அபிப்ராயமென்ன? (விடை) வெறும் பிரசாரமன்று; எழுதியும் வெளியிட்டுள்ளார்; "நாரதர் சொல்லி வான்மீகி இயற்றினுர். அதில் ஒருவிதத் தவறும் இருக்கமுடியாது; ஓர் எழுத்துவிடாமல் எல்லாம் ஒப்புக்கொண்டே தீரவேண்டும்" என்பதாயிருந்தால் எனக்கு ஒன்றும் சொல்ல இடமில்லை. 'அப்படியில்லை, உனக்குத் தோன்றியதைத் தோன்றியவாறு தாராளமாகச் சொல்லலாம், குற்றமில்லை' என்று பெரியோர் இடம் கொடுத்தால் உத்தரகாண்டத்தைப்பற்றிச் சில வார்த்தைகள் சொல்ல விரும்புகிறேன். நானும் எவ்வளவோ முயற்சி செய்துதான் பார்த்தேன், ஸ்ரீராமன் உலகத்துக்கு வழிகாட்ட அவதரித்த கடவுள்; சீதையை அரும்பாடுபட்டு இலங்கையிலிருந்து மீட்டுக்கொண்டு வந்த பின் ஊராரின் வம்புப் பேச்சைக்கேட்டுக் காட்டுக்கு அனுப்பிவிட்டான் என்கிற கொடூரக் கதையை, அவலட்சண புராணத்தை என் மனசுக்குச் சமாதானப்படுத்திக்கொள்ள முடியவே யில்லை. மிக்க அன்புடனும் பக்தியுடனும் முயற்சி செய்திருக்கிறேன். பெரியோர்கள் என்னை 'நாஸ்திகன், தூஷுமானுக் காரன்' என்று சொல்லக்கூடாது. உண்மையில் இந்தக் கதையைச் சகிக்க என்னுல் முடியவில்லை. நாஸ்திகனுயிருந்தால் ஒரு வேளை சகித்திருப்பேன்" என்று எழுதியச்சிட்டு வெளியிட்டுள்ளார்; மேலேயும் சில காரணங்களை நிரூபித்துத் தம்முடைய கொள்கையை நிலை நாட்டப்பார்க்கிருர். இதையெல்லாம் நீ பார்த்திருக்கிருயல்லவோ. ....

20. வினு:— அதை உதாஹரித்துவிட்டதனுல் எனக்கென்ன த்ருப்தி; அதைப் பற்றி உம்முடைய முடிவையன்ருே நான் கேட்கவிரும்புகிறேன். (விடை) இதிஹாஸ புராண கதைகளில் நம்முடைய ஆராய்ச்சிசக்தியைப் புகவிட்டு, இன்ன கதை ஸம்பாவிதம், இன்னகதை அஸம்பாவிதம் என்று நமது அற்ப புத்தியால் நிரூபித்து நிர்ணயிப்பதென்று கொண்டால், உலகத்தில் விமர்சகர்களாகப் புகழ்பெற்ற பலரும் கூடி ஸகல புராண கதைகளையும் அஸத் தாக்கிவிட முடியும். உத்தர ஸ்ரீராமாயணத்தை அவலக்ஷண புராணமென்று இவர் சொல்லுகிருர்; ஸ்ரீராமாயணகதையையே அவலக்ஷண புராணமென்று நிரூபிப்பார் பலரையும் பார்த்திருக்கிருேம். உலகமெல்லாம் உச்சிமேல் வைத்து மெச்சும் பகவத்கீதையையும் பழிப்பவர்களை நாம் பார்த்திருக்கிருேம். அன்னுருடைய உபபாதனங்களைக் கேட்கும்போது 'ஆமாம்; பகவத்கீதை கல்பிதந்தான்' என்று பரம ஆஸ்திகர்களின் நெஞ்சமும் நம்பிவிடுகின்றதாம்.

21. வினு:— பிரகிருதம் உத்தர ஸ்ரீராமாயணத்தைப் பற்றி மட்டும் ஸாதிக்கவேணும். மிகத்திடமான நிரூபணங்கள் வேணும். (விடை) நம்மைக்காட்டிலும் பதினுயிரமடங்கு மேதாவிகளான பூருவர்கள் இவ்வுத்தரராம கதையை ஆதரிக்கிருர்களா? இல்லையா? என்பதைப்பற்றி முன்னம் விமர்சிப்போம். பண்டைக்காலத்து மஹாகவிகளில் பவபூதி யென்பவர் உத்தரராம சரிதம் வெகு ஆச்சரியமாக எழுதியிருக்கிருரென்பதும் அது உலகமெங்கும் நற்புகழ் பெற்றுப் பரவியிருக்கிறதென்பதும் ப்ரஸித்தமல்லவா? ... .... ....

22. வினு:— ஆக்ஷேபகரான பெரியாருங்கூட "பவபூதி தன் ஸாமர்த்தியத்தை உபயோகித்துப் பழைய கதையை ஓரளவு மாற்றிவிட்டான். ............பவபூதி தன் கற்பனு சாமர்த்தியத்தை உபயோகித்து ஊர் வம்புக்குப் பயந்த கதையின் அவலக்ஷணத்தைக் குறைத்துவிட்டான்" என்கிருரே; இது சரியா? (விடை) இது அர்த்தமில்லாத வார்த்தையே; இதிஹாஸ புராண கதைகளை நாடகங்களில் அமைக்கின்ற மஹாகவிகள் யாவருமே இடையிடையே தங்கள் கற்பனு சக்தியை உபயோகித்துக் கதையின் சில பாகங்களை மாற்றுவது வழக்கம். மஹாபாரதத்திலுள்ள சகுந்தலா உபாக்கியானத்தைக் காளிதாஸர் சாகுந்தல நாடகமாக இயற்றுகையில் கதையின்போக்கை எவ்வளவு மாறுபடுத்தி யிருக்கின்ருரென்று பார்க்கவேணும். முராரி கவி ஸ்ரீராமாயண கதையை அநர்க்கராகவ நாடகமாக இயற்றுகையில் கதையின் ரீதியை எவ்வளவு மாற்றியிருக்கிருரென்று பார்க்கவேணும். உத்தரராம சரிதமெழுதிய பவபூதியே மஹாவீர சரித நாடகமுமியற்றியுள்ளார். அதில் ஸ்ரீராமாயண கதையை எவ்வளவு மாற்றியிருக்கின்ருரென்று பார்க்கவேணும். இவ்வளவும் விமர்சித்தால் கதைப் போக்கைச் சிறிது மாற்றுவதென்பது நாடகங்களின் இயல்பு என்பது புலனுகும்.

23. வினு:— மேலே குறித்த பெரியார் உத்தர ஸ்ரீராமாயணம் முழுவதையுமே கல்பிதமென்கிருரா? அல்லது, லோகாபவாதத்தை ஆதரித்துப் பிராட்டியைக் காட்டுக்குப் போக விட்ட கதையை மாத்திரம் கல்பித மென்கிருரா? (விடை) அவர் "உத்தரகாண்டம் யாரோ எழுதி ராமாயணத்துடன் சேர்ந்தே போயிற்று" என்றெழுதியிருப்பதனுல் உத்தர ஸ்ரீராமாயணம் முழுவதையுமே கல்பிதயென்கிருரென்று நன்கு விளங்காநின்றது. .... .... ....

24. வினு:— உத்தர ஸ்ரீராமாயணத்தை நம்முடைய ஆழ்வாராசாரியர்களில் யாராகிலும் தம்முடைய நூல்களில் தழுவியிருப்பதுண்டோ? (விடை) ஏனில்லை? தாராளமாகவுண்டு.

குலசேகராழ்வார் தமது திருமொழியில் பத்தாவது பதிகத்தில் ஸ்ரீராமாயண கதையை உத்தர காண்டமு முட்படவேயன்றே பாடியிருக்கிறார். வேதாந்தவாசிரியரும் ரகுவீரகத்யத்தில் உத்தரகாண்ட கதையைச் சேர்த்தே முடித்திருக்கிறார். ஆக, ஆழ்வாராசாரியர்களுக்கும் உத்தரகாண்டம் உடன்பாடேயென்பது ஐயமற்றது.

25. வினா:— ஆக்ஷேபகர் இத்தகைய ஆசார்ய ஸ்ரீஸூக்திகளை ஒரு பொருளாகஎண்ணார் போலிருக்கிறதே. ஏற்கெனவே கல்பிதமாகி ஏடுபட்டுக்கிடந்த கதையைக் கவிகளும் ஆசாரியர்களும் நம்பித் தழுவிவிட்டார்கள் என்று அவர் வாதிக்கவல்லவராதலால் தேவரீர் காட்டிய பிரமாணங்கள் அவருடைய மனதைத் தெளிவிக்குமா? (விடை) நம்மைக்காட்டிலும் ஆயிரமடங்கு மேதாவிகளான பூருவர்கள் இக்கதையை அதிசங்கியாமல் ஆதரித்திருக்கிறார்கள் என்பதைப் பிராமாணிகர்கட்கு மூதலிக்கவே இதை நான் எடுத்துக்காட்டினேன். அவர் நம்பாவிட்டாலென்ன?

26. வினா:— ராமன் உலகத்துக்கு வழி காட்ட அவதரித்த கடவுள்; ஊராரின் வம்புப்பேச்சைக் கேட்டுச்சீதையைக்காட்டுக்கு அனுப்பிவிடமாட்டான் என்கிறாரே அவர். (விடை) இராமன் உலகத்துக்கு வழிகாட்ட அவதரித்தபடியினால் தான் இங்ஙனம் செய்ய நேர்ந்தது என்று திண்ணமாகத் தெரிந்துகொள்ள வேண்டும். எப்படிப்பட்டவரும் லோகாபவாதத்திற்கு அஞ்சியே வர்த்திக்கவேணுமென்று வழிகாட்டினபடி.

27. வினா:— சீதையை அரும்பாடுபட்டு இலங்கையிலிருந்து மீட்டுக்கொண்டு வந்த பின் தானே காட்டுக்கு ஓட்டுவாரா? என்கிறாரே; இதற்கு என்ன சொல்லுவது? (விடை) இராமன் அரும்பாடு பட்டதாக நினைப்பது கேவலம் கதைப்போக்கில் மாத்திரமே கண்செலுத்துவார்க்கு உற்றது. "பொல்லாவரக்கனைக் கிள்ளிக்களைந்தானை" என்று அவலீலையாகப் பேசினாள் ஆண்டாள். "ஸேதுபந்தந முகா: க்ரீடாஸ் தவாடம்பரம்" என்றார் கூரத்தாழ்வான்.

28. வினா:— "ஸம்க்ஷேப ராமாயணத்தில் உத்தரகாண்ட சரிதை இல்லாமையால் இது கல்பிதம்" என்கிறாரே இது என்ன? (விடை) ஸம்க்ஷேப ராமாயணத்தில் பாலகாண்ட கதை சிறிதும் தொடப்படவில்லை என்பது நிர்விவாதம். யுவராஜ பட்டாபிஷேக முயற்சி முதலாகவே நாரத முனிவரால் வான்மீகிக்கு உபதேசிக்கப்பட்டிருக்கின்றதென்பது வ்யக்தம். இது கொண்டு பாலகாண்டமும் கல்பிதமென்ன வேண்டிவருமே.

29. வினா:— "இராமன் அரசாண்டு வரும்போது அந்நகரில் அற்பகுணமுள்ளவன் நாஸ்திகன் துஷ்டன் மருந்துக்குக் கூட ஒருவன் அகப்படமாட்டான் என்று மிகமிகச் சொல்லியிருப்பதற்கு முரணாக சீதையைப் பழிக்கும் ஜனங்களிருந்ததாக ஒப்புக்கொள்ளவே முடியாது"? என்கிறாரே? (விடை) க்ருதயுகத்தில் தரும தேவதையானது நான்கு கால்களோடும் குறைவின்றி வாழ்ந்ததாகச் சொல்லப்படுகிறது. அப்படிப்பட்ட காலத்திலும் அதர்மச் செயல்கள் பல நடந்தனவாகப் புராணங்கள் கூறுகின்றன. பெரும்பான்மையாகச் சொல்லப்படும் விஷயம் சிறுபான்மையை அழிக்ககில்லாத தென்று அறியவேணும். 'ராமராஜ்யத்தில் இரப்பாளன் ஒருவன் கூட இல்லை; அனைவரும் உதாரர்களாகவே வாழ்ந்து வந்தார்கள்' என்று சொல்லப்பட்டிருக்கிறது. இரப்பாளன் ஒருவன் கூட இல்லையானால் அந்த உதாரர்கள் தானம் பண்ணினது யார்க்கு? என்று கேட்டால் இப்பெரியார் என்ன விடையிறுப்பர்?

30. வினு:— "அப்படி யாராவது பேசினுலும் அதை அந்த ராமன் ஏன் காதில் போட்டுக்கொண்டான்?" என்கிருரே? (விடை) இராமனையே நேரில் கண்டுதான் கேட்கவேணும். ஸ்யமந்தகமணி விஷயமாகக் கண்ணனையும் இங்ஙனே கேள்வி கேட்கலாம். இராமனைக் கைகேயி காட்டுக்குப் போகச் சொன்னுலும் அவள் பேச்சுக்கு உடன் பட்ட தந்தைதான் போகச் சொன்னுலும் இராமன் ஏன் காட்டுக்குப் போகவேண்டும்? முடிசூடுதற்காகச் சடங்குகள் பலவும் அனுட்டித்து ஆய்விட்டபடியால் இனி வனம் போக முடியாதென்று இராமன் ஏன் மறுக்கக் கூடாது? என்று பலர் கேட்பதுண்டு. இப்படி ஒன்றிரண்டு கேள்விகளல்ல; பல கேள்விகள் பற்ற் கேட்பதுண்டு. அக்கேள்விகளோடு கூடவே இக் கேள்வியும் கேட்கவேண்டியதே.

31. வினு:— யுத்த காண்டத்தின் முடிவிலுள்ள அக்நி ப்ரவேச கதையும் கல்பிதமே யென்று காட்டுவதற்கும் இப்பெரியார் இறங்கியிருக்கின்ருரே? (விடை) இவர் தம் புத்திக்குப் பொருந்தாத கதைகளையெல்லாம் கல்பிதமென்று கழித்துவிடப் பார்க்கிருர். இவருடைய புத்திக்குப் பொருந்தும் கதைகள் மற்ருெரு மேதாவியின் புத்திக்குப் பொருந்தாம லிருக்கலாம். அவ்வண்ணமாக ஒவ்வொருவருடைய நிரூபணங்களையும் கேட்டே இனி நாம் புராணங்களை ஆதரிக்கவேண்டும் போலும்.

32. வினு:— இத்தகைய அநீதியான காரியத்தை இராமன் செய்தால் அனுமான் வெறுமனிருப்பரா? லக்ஷ்மணன் பரதன் இவர்கள் தாம் சகித்திருப்பர்களா? சீதைக்காக முன்பு உயிர் துறந்த ஜடாயு மீண்டும் உயிரெழுந்து வந்து தடுத்திருக்க மாட்டாரா? என்கிருரே; இவற்றுக்கு என்ன பதில்? (விடை) இவை ஸ்ரீராமாயணம் நடையாடுந்தேசத்தில் விளையக் கூடியனவல்ல; பஞ்சவடியில் பிராட்டிக்குக் காவலாக அமைந்திருந்த ஜடாயு இராவணன் வருகிற காலத்தில் எங்குச் சென்ருர்? மாரீசனது மாயக்குரலைக் கேட்டுக் கலங்கின ஸீதை லக்ஷ்மணனைக் கடுஞ் சொற்களால் பொடிந்து துரத்தினதற்காக அந்த லக்ஷ்மணன் பர்ணசாலை யை விட்டு வெளியேறினுலும் விளைவதறியக் கூடியவனுகையாலே பிராட்டியின் கட்டளைப்படி இராமனிடம் போவதுபோல் காட்டிவிட்டு ஒரு மூலையில் பதுங்கியிருந்து இராவணன் பிராட்டி யைக் கவர்ந்து செல்லாதபடி காத்திருக்கலாகாதா? என்கிற பல பல கேள்விகளைக் கேட்பார் மலிந்திருக்குமிவ்வுலகில் இப்பெரியாருடைய கேள்விகள் வியப்பை விளைப்பனவல்லவே; வாலியை நோக்கி விடையிறுத்த பெருமாள் "ஸூக்ஷ்ம: பரமதுர்ஜ்ஞேய: ஸதாம் தர்ம: ப்லவங்கம" என்ருர். "தர்மஸ்ய தத்வம் நிஹிதம் குஹாயாம்" என்ருர் தர்மபுத்திரர்; நம்போல்வாருடைய சிற்றறிவுக்கு எட்டுமதன்று தருமநுட்பம். (உத்தரராமாயண வினு விடைகள் முடிந்தன.)

33. வினு:— ஸ்ரீ ராமாநுஜர்க்கு முற்பட்ட ஆசாரியர்கள் அவருடைய திருமுடி ஸம்பந்தத்தினுலும், பிற்பட்ட ஆசாரியர்கள் அவருடைய திருவடி ஸம்பந்தத்தினுலும் உத்தீர்ணரானுர்கள் என்கிற ஐதிஹ்யம் ஸம்பிரதாய நூல்களிலுள்ளது; இதைச் சிலவகுப்பினர் அஸங்கதமென்று சொல்லி வருகிருர்களல்லவா? இதில் தேவரீருடைய திருவுள்ளமெப்படி? (விடை) வேதாந்தவாசிரியர் இவ்வைதிஹ்யத்தை நியாயபரிசுத்தியின் உபக்ரமத்திலிட்ட 'பத்யுஸ் ஸம்யமிநாம் ப்ரணம்ய சரணௌ தத்பாத கோடீரயோஸ் ஸம்பந்தேந ஸமித்த்யமாந விபவாந்........" என்கிற சுலோகத்தில் பொறித்து வைத்தார். "அர்வாஞ்சோ யத்பதஸரஸி ஜத்வந்த்வ மாச்ரித்ய, பூர்வே மூர்த்நா யஸ்யாந்வயமுபகதா தேசிகா முக்திமாபு:; ஸோயம்

ராமாநுஜமுநிரபி ஸ்வீயமுக்திம் கரஸ்தாம் யத்ஸம்பந்தாத் அமநுத கதம் வர்ண்யதே கூரநாத:" என்கிற ச்லோக ரத்னம் பட்டர் அருளிச் செய்தது; இந்த ச்லோகத்தில் சொல்லுவதென்ன வென்றால் எம்பெருமானாருடைய திருமுடி ஸம்பந்தத்தினால் முற்பட்ட ஆசாரியர்கள் உஜ்ஜீவித்தார்களென்றும், பிற்பட்ட ஆசாரியர்கள் அவருடைய திருவடி ஸம்பந்தத்தினால் உஜ்ஜீவித்தார்களென்றும் சொல்லுகிறது.

**34. வினா:—** பிற்பட்டவர்களுக்கு பாஷ்யகாரருடைய திருவடி ஸம்பந்தத்தினால் மோக்ஷ மென்றால் இது பொருந்தும். இதில் ஆக்ஷேபமுதிக்க வழியில்லை. முற்பட்டவர்களுக்குத் திருமுடி ஸம்பந்தத்தினால் மோக்ஷ முண்டாயிற்றென்றால் இது அஸங்கிதமான வார்த்தை யல்லவா? இது எப்படி பொருந்தும்? ஸ்ரீமந்நாத முனிகள், உய்யக்கொண்டார், மணக்கால் நம்பி போல்வார்தானே பாஷ்யகாரர்க்கு முற்பட்டவர்கள். அவர்கள் என்றைக்கோ பரமபதம் போய்ச்சேர்ந்தவர்களன்றோ? அவர்கள் காலத்தில் பாஷ்யகாரர் அவதரித்திருந்தாலன்றோ இவருடைய திருமுடி ஸம்பந்தம் அவர்களுக்கு நேர்ந்ததென்று சொல்ல இடமுண்டு; இவருடைய அவதாரமே நடந்திலாத ஸமயத்தில் இவருடைய திருமுடி ஸம்பந்தம் அவர்களுக்கு எப்படி ப்ராப்தமாகக் கூடும்? இது ஸர்வாத்மநா அஸம்பாவிதமான வார்த்தையென்று தோன்றுகிறதே. இதற்கு த்ருப்திகரமான விடை தந்தருளவேணும். **(விடை)** இத்தகைய ஏற்றம் எம்பெருமானார்க்குச் சொல்லப்படுகின்றதேயன்றி ஸ்ரீமந்நாதமுனிகளுக்கோ ஆளவந்தாருக்கோ மற்றும் வேறு ஆசாரியர்க்கோ சொல்லப்பட்டிருக்கவில்லை. *கலியுங்கெடுங்கண்டு கொண்மின்* என்றவிடத்து ஐதிஹ்யத்தின்படி எம்பெருமானார் பவிஷ்யதாசார்யராக நம்மாழ்வார் திருவடிகளில் பண்டேதோன்றினவராதலால் அவருடைய திருவவதாரத்தைப் பிற்பட்டதாக வைத்துப் பூர்வபக்ஷம் செய்வது பொருத்தமன்று. இன்னமும் விரிவாகச் சொல்லவேண்டிய துண்டு; அது குருமுகமாகக் கேட்கத்தக்கது.

**35. வினா:—** வேதத்தில் எம்பெருமானுடைய பரத்துவம் மட்டும் ஓதப்பட்டிருக்கின்றதேயன்றி ஸௌலப்யம் எங்குமே பேசப்பட்டிருக்கவில்லையென்கிறார்களே; இஃது உண்மை தானோ? (விடை) வேதமோதினவர்கள் இப்படிச் சொல்லார்கள்; வேதத்தில் ஸௌலப்யமும் சொல்லப்பட்டேயுள்ளது; ஸௌலப்யமில்லாத பரத்துவமும், பரத்வமில்லாத ஸௌலப்யமும் புகழத் தக்கவையல்ல வென்பது ஆசாரியர்களின் திருவுள்ளம். "பரத்வங்கண்டு அகலாமைக்கு ஸௌலப்யம்; ஸௌலப்யங்கண்டு இகழாமைக்குப் பரத்வம்" என்பது ஆசாரியர்களின் திருவாக்கு. மேருமலை, கைலாஸமலை, க்ஷீராப்தி—இத்யாதிகளில் பரத்வமிருந்தும் ஸௌலப்ய மில்லை. காஷ்டலோஷ்டாதிகளில் ஸௌலப்யமிருந்தும் பரத்வமில்லை. பரத்வ ஸௌலப்யங் களிரண்டும் ஸாமாநாதிகரண்யம் பெற்றுப் பொலிவது எம்பெருமானிடத்தில்தான். ஸௌலப் யத்தை நடவடிக்கைகளால் காட்டமுடியுமேயல்லது வேறுவகையினால் காட்ட இயலாது. அதற்காகவே பகவான் பலபல திருவவதாரங்களைச் செய்தருளினான். திருவவதாரங்களில் பெரும்பாலும் காட்டியருளினது ஸௌலப்யத்தையே.

**36. வினா:—** திருவவதாரத்தைப்பற்றி இதிஹாஸபுராணங்களில் பேசியிருக்கின்றதே யல்லது வேதத்தில் பேசியிருக்கவில்லையாமே. (விடை) அது தவறு; "**அஜாயமாநோ பஹுதா விஜாயதே**" என்கிற வேதவாக்கியம் அந்தணர்களனைவருமறிந்தது. **அஜாயமாந:**—பிறப்பிலியா யிருக்கச் செய்தேயும், **பஹுதா விஜாயதே**—பலபடியாகப் பிறக்கிறான் எம்பெருமான்—என்பது

இந்த வேதவாக்கியத்திற்குப் பொருள். மத்ஸ்யகூர்மாதி விபவாவதாரங்களையெல்லாம் உட்கொண்டேயன்றோ இந்த சுருதிவாக்கியம் அவதரித்தது. இதன் பொருளை மற்றொருபடியாகச் சொல்ல நினைத்தால் 'பரத்வசாலியாயிருக்கச் செய்தேயும் ஸௌலப்யசாலியாயுமிராநின்றான்' என்று சொல்லத்தட்டில்லை. இதுதான் உண்மைப் பொருள்.

37. வினு:— இந்த ஒரு வாக்கியந்தவிர வேறு வாக்கியம் கிடையாதே வேதத்தில். (விடை) ஏனில்லை? **''பிதா புத்ரேண பித்ருமாந் யோநியோநௌ''** என்பது காடகச்ருதி வாக்யம். இதன் பொருளாவது, எம்பெருமான் ஸகல லோக பிதாவாயிருக்கச் செய்தேயும் தன்னுடைய புத்திரர்களைத் தனக்குப் பிதாவாகக் கொண்டு எங்ஙின்ற யோனியுமாய்ப் பிறக்கிறான் என்பதாம். இந்த ச்ருதிவாக்யத்தில் ஸௌலப்யம் ஸுஸ்பஷ்டமாகவே காட்டப்பட்டு விட்டது. ஸகல ஜகத் காரண பூதனுகவே யிருக்க வேண்டியவன் கார்ய பூதனுமாகிறானென்றால் ஸௌலப்யத்தை இதைவிட வேறுவிதமாகச் சொல்லுவதெங்ஙனம்? முக்கியமாக வொன்று தெரிவிக்கப்படுகிறது. நம் ஆசாரியர்கள் திருமந்திரத்திலுள்ள நாராயண பதத்தை விவரிக்கு மிடத்து நாராயண பதத்திற்கு ஷஷ்டீதத்புருஷ ஸமாஸமும் பஹுவ்ரீஹி ஸமாஸமுமாகிற இரண்டு ஸமாஸங்கள் காட்டிப் பொருளை விளக்கி **''இவற்றால் பலித்தது பரத்வ ஸௌலப்யங்கள்''** என்று நிகமித்தார்கள். திருமந்த்ரார்த்த மாகையாலே இதனை நான் இங்கு விவரிக்கின்றிலேன்; ரஹஸ்ய வியாக்கியானங்களிலே கண்டு கொள்வது. சாஸ்த்ரஜ்ஞர்கள் சில விஷயங்களை **'தர்மிக்ராஹக மாநஸித்தம்'** என்பர்கள்; இங்குமப்படியே; பராத்பரனான எம்பெருமானுக்கு வாசகமான திருநாமங்களுள் தலைமை பெற்றதான நாராயண நாமத்தை நாம் ஸ்மரிக்கும்போதே ஸௌலப்யமும் தோன்றியே தீருமென்பதை உணரவேணும்.

38. வினு:— எம்பெருமான் அவதரிப்பதுண்டென்று வேதமோதிற்றேயொழிய அவதாரமொன்றையும் எடுத்துச் சொல்லிற்றில்லையே? (விடை) ஏனில்லை? **''இதம் விஷ்ணுர் விசக்ரமே த்ரேதா நிததே பதம்''** என்பது முதலான வேதவாக்கியங்கள் எம்பெருமானுலகளந்த சரிதையைச் சொல்லுகின்றன. இவ்வபதானத்தினால் பரத்வம் விளங்குகிறதா? ஸௌலப்யம் விளங்குகிறதாவென்று சர்ச்சைசெய்த பெரியார்கள் பரத்வம் விளங்குகின்றதென்னும் பக்ஷத்தை மறுக்காமல் ஸௌலப்யம் மிக விளங்குகின்றதென்று திருவுள்ளம் பற்றினார்கள் ''தாவியன்றுலக மெல்லாம் தலை விளாக்கொண்டவெந்தாய்!'' என்கிற திருமாலைப் பாசுரத்தின்படி வஸிஷ்ட சண்டாள விபாகமற யுகபதேவ எல்லாரையும் விஷயீகரித்தது ஒப்பற்ற ஸௌலப்ய கார்யமன்றோ. இஃதொன்றே போதுமே வேதத்தில் ஸௌலப்ய ப்ரதிபாதன முண்டென்றறிய.

39. வினு:— *வணங்குந் துறைகள் பலபலவாக்கி மதி விகற்பால் பிணங்குஞ் சமயம் பலபலவாக்கி* என்று நம்மாழ்வாரருளிச் செய்தபடியே உலகில் பலபல மதங்கள் தோன்றி யிருக்கின்றனவன்றோ? இவற்றில் பாகுபாடுகளுண்டானால் அதைப்பற்றித் தெரிந்து கொள்ள விரும்புகிறேன். (விடை) பொதுவாக மதங்கள் வைதிக மதமென்றும் அவைதிக மதமென்றும் இருவகுப்பாகும். வேதத்தைப் பிரமாணமாகக்கொள்ளும் மதம் வைதிக மதம். வேதத்தைப் புறக்கணித்து ஸ்வதந்திரமாகத் தோன்றிய மதம் அவைதிக மதம். அவைதிக மதங்களிற் காட்டிலும் வைதிக மதம் சிறந்ததென்னுமிடத்தை நாம் விவரிக்க வேணுமோ?

40 வினு:— மதங்களைத்தானே தரிசனமென்றும் வழங்குவது; எந்த தரிசனம் சிறந்தது? (விடை) வைதிக மதங்களுள் பரமபவித்திரமான விசிஷ்டாத்வைத தரிசனம் மிகச்

4

சிறந்து விளங்குகின்றது. நம்மாழ்வார் திருவாய்மொழி தொடங்கும்போது "உளன் சுடர்மிகு சுருதியுள் இலையுண்ட சுரனே" என்கிற பாசுரத்தினுல் 'தாம் போதிக்கும் பரமபுருஷன் வேதங்களிலும் வேதாந்தங்களிலும் விளங்குபவன்' என்றருளிச் செய்கையாலே இக்கலியுகத்தில் அவ்வாழ்வார் தொடக்கமாகப் பரவியுள்ள விசிஷ்டாத்வைத ஸம்பிரதாயம் பரமவைதிகமென்னத் தட்டில்லை. ப்ரமாணம்,ப்ரமாதா, ப்ரமேயம் என்ற மூன்று வகுப்புகளும் நம் தரிசனத்தில்தான் சீர்மைபெற்று விளங்குவன.

41. வினு:— *ஆழ்வார்கள் வாழி, அருளிச்செயல் வாழி* என்னுமுபதேசரத்தினமாலைப் பாசுரத்தினுல் ஆழ்வாரருளிச் செயல்களுக்கு மட்டுந்தானே வாழ்த்துக் கூறப்பட்டது மணவாளமாமுனிகளால். (விடை) அப்பாசுரத்தில் * செய்யமறை தன்னுடனே சேர்ந்து * என்றதையும் காணவேணும். ப்ரமாணங்களும் ப்ரமாதாக்களும் ப்ரமேயங்களும் ஸாரமாகத் தெரிவிக்கப்பட்டமை காண்க. வடமொழி, தென்மொழி வேதங்களாகிற உபய வேதங்களும் ஸ்ரீபாஷ்ய பகவத்விஷயாதிகளும் நமக்கு ப்ரமாணம். யதார்த்தஜ்ஞான நிதிகளான ஸ்ரீமந் நாதமுனிகள் ஆளவந்தார் எம்பெருமானுர் போல்வாரான மஹாசார்யர்களே ப்ரமாதாக்களில் தலை சிறந்து விளங்குபவர். ஸகல சேதநாசேதநசரீரகனுய் ஸமஸ்த கல்யாண குணாத்மகனுன ஸ்ரீமந்நாராயணனே பரதத்துவமென்றும், அவனுடைய திருவடித் தாமரைகளில் பண்ணும் ப்ரபத்தியே பரமஹிதமென்றும், *நலமந்தமில்லதோர் நாட்டிலே நித்யாநந்தமயமான நித்ய கைங்கர்யமே பரம புருஷார்த்தமென்றும் இங்ஙனே கூறப்படும் அர்த்த விசேஷங்களே ப்ரமேய ச்ரேஷ்டங்களாக விளங்குகின்றன. ஆக இத்தகைய ப்ரமாண ப்ரமாத்ரு ப்ரமேய வைசிஷ்ட்யமே நம்முடைய தரிசனத்தின் சிறப்புக்கு ஹேதுவாகாநின்றது.

42. வினு:— இதரமதஸ்தர்களையும் வைதிகர்களாகக் கொள்ளலாமன்றோ? (விடை) பரமவைதிகர்களென்கிற ஏற்றம் நமக்கே உரியது. ப்ரத்யக்ஷத்தாலோ அநுமானத்தாலோ அறிந்துகொள்ள முடியாத அர்த்த விசேஷங்களையறிவிக்கும் வாங்மயமே வேதமெனப்படும். **"ப்ரத்யக்ஷேணுநுமித்யா வா யஸ்தூபாயோ ந புத்த்யதே, யத் தம் விதந்தி வேதேந தஸ்மாத் வேதஸ்ய வேததா"** என்கிற ப்ரமாணம் இங்கே அநுஸந்தேயம். வேதத்தை ப்ரமாணமாக இசையாத சாருவாக ஜைந பௌத்தாதிகள் **பாஹ்யர்க**ளெனப்படுவர். வேதத்தைப் பரமப்ரமாணமாக இசைந்துவைத்தும் பரப்ரஹ்மம் குணசூந்யமென்றும் அலக்ஷ்மீகமென்றும் அசரீரகமென்றும் விபூதிவிரஹிதமென்றும் இங்ஙனே மனம்போனபடி யெல்லாம் பேசுபவர்கள் குத்ருஷ்டிகளெனப்படுவர். குத்ருஷ்டிகளானுலும் வேதத்தை ப்ரமாணமாக இசையுமவர்கள் வேதபாஹ்யர்களிற் காட்டிலும் மேம்பட்டவர்களன்றோவென்று நீ நினைக்கக்கூடும். பாஹ்யர்களோடு குத்ருஷ்டிகளோடு ஒரு வாசியில்லை யென்றருளிச் செய்கிருர் கூரத்தாழ்வான்; (ஸ்ரீவைகுண்டஸ்தவே)—**"பாஹ்யா: குத்ருஷ்டய இதி த்விதயேபி அபாரம் கோரம் தமஸ் ஸமுபயாந்தி நஹீக்ஷஸே தாந்"** இத்யாதியாலே.

43. வினு:— ஸ்ரீ வைஷ்ணவர்களிற் காட்டிலும் ஸ்மார்த்தர்கள் வேதாத்யயனத்திலே அதிகமான அபிநிவேசத்தைக் காட்டுகின்றவர்களல்லவா? வேதமோதினவர்களின் ஸங்கியை ஸ்மார்த்த வகுப்பில் தேறுவதுபோல் ஸ்ரீ வைஷ்ணவ வகுப்பில் தேற மாட்டா தென்று நினைக்கிறேன். இந்த ஏற்றம் அவர்களுக்கு அஸாதாரணமல்லவா? (விடை) அதற்கென்ன ஸந்தேஹம்? ஸ்ரீ வைஷ்ணவ வகுப்பில் வேதமோதினவர்கள் நூற்றுக்கு ஒருவரிருவர் தேறக்கூடும். .... .... .... .... ...

44. வினு:— ஸ்ரீவைஷ்ணவேதரர்களின் வகுப்பில் வேதமோதினவர்கள் அதிகமாகத் தேறுகிறார்களென்பதை யொப்புக்கொண்டு அவர்கள் பரமவைதிகர்களல்லர் என்றால் இது யுக்தமாகுமா? (விடை) வேதத்தின் உண்மைப் பொருளையறியாமல் வேதத்தை உருச் சொல்லிக் கொண்டிருப்பதனுல் யாது பயன்? * வேதபார பராக்ராந்தஸ் ஸ வை ப்ராஹ்மண கர்த்தப:* என்று ப்ரஸித்தமான ப்ரமாணம் உனக்குத் தெரியாதா? "குங்குமஞ்சுமந்த கழுதையோபாதி" என்று ஸ்ரீவசனபூஷணமும் ஓதியிருக்கிருயல்லவா? தத்வஹித புருஷார்த்தங்களுக்கு வேதமே தலையான ப்ரமாணம். இதிஹாஸ புராணங்கள் வேதோபப்ரும்ஹணார்த்தமாகவே அவதரித்தவை. இதிஹாஸ புராணங்களைக் கொண்டே வேதார்த்த நிர்ணயம்பண்ண வேண்டும். இதிஹாஸ புராணங்களை அநாதரிப்பவர்கள் அல்பச்ருதர்களெனப் படுகிறார்கள். *பிபேத்யல்பச்ருதாத் வேதோ மாமயம் ப்ரதரிஷ்யதி* என்கிற ப்ரமாணமும் நீயறியாததன்றே? அல்பச்ருதர்களால் வேதம் கலக்கப்படுவதான உண்மையை நீ யுணரவேண்டும்.

45. வினு:— தேவரீர் ஸாதிப்பது ஸரி; வேதங்களுக்கு பாஷ்ய மியற்றின பெருமை ஸ்ரீவைஷ்ணவர்களில் ஒருவர்க்குமில்லையே. வித்யாரண்ய பட்டபாஸ்கராதிகளான ஸ்ரீவைஷ்ண வேதரர்களே யன்றோ வேதபாஷ்யங்கள் செய்திருக்கிறார்கள். அவர்களை வேதப் பொருளறி யாதவர்க ளென்று சொல்லி விடலாமா? (விடை) அவர்கள் வேதபாஷ்யங்கள் இயற்றியுள்ளார்க ளென்று இவ்வளவு மட்டும் நீ தெரிந்து கொண்டிருக்கிறாயே யொழிய அவற்றை உட்புகுந்து பார்த்திருக்கிறாயோ? இல்லையே. பார்த்தவர்கள் என்ன தெரிவிக்கிறார்க ளென்பதை நீ அவசியம் தெரிந்து கொள்ளவேண்டும்.

46. வினு:— நான் வேதமோதியிருந்தாலன்றோ வேதபாஷ்யங்களைப் பார்க்கவோ அவற்றை உட்புகுந்து பார்க்கவோ அவகாச முண்டாகும். வேதகந்தமேயறியாதவன் நான். வேதபாஷ்யங்களில் ஏதாவது கோளாறுகளிருந்தால் அதைப் பற்றி தேவரீரே விளக்கிக் கூற வேணும் (விடை) வேதமோதாதவர்களுக்கு இதை விளக்கிக் கூறுவதனுல் பயனில்லை. விஷயம் ரஸிக்க மாட்டாதாகையாலே விவரித்துச் சொல்லாமல் ஸாரமாகச் சொல்லுகிறேன் கேள். வேதபாஷ்ய விமர்சனம், வேதபாஷ்ய பரிசீலனம், பதபாட பரித்ராணம், பதபாட பரிசுத்தி முதலான சில க்ரந்தங்களையும், இவற்றுக்குத் தலையான வேதார்த்யாபாத ஸர்வஸ்வக்ரந்தத்தையும் காஞ்சீ க்ரந்தமாலா கார்யாலயத்தில் நீ பெற்று வாசித்துப் பார்ப்பதோ, அறிஞர் மூலமாக அவற்றின் பொருள்களைக் கேட்பதோ செய்தால், வேதத்தின் பொருளை நிர்ணயிப்பதற்கென்றே முக்கியமாக அவதரித்த பதபாடத்திற்குச் சேராத படி வித்யாரண்ய பட்டபாஸ்கர பாஷ்யங்கள் ஜனித்திருக்கின்றன வென்பதை எளிதாக வுணரலாம். ஆகவே "அந்யதா க்ருதம் அக்ருதம் பவதி" என்கிற நியாயத்தாலே அவர்கள் பாஷ்யமியற்றினதும் இயற்றாததும் பரியாயமே யென்று கொள்ளாய்; இது வொரு பெரிய விஷயங்காண்.

47: வினு:— பதபாட மோதாமல் வெறும் ஸம்ஹிதையை மட்டும் ஓதிவிட்டா வேதத்திற்கு பாஷ்யமியற்றப்புகுந்து விட்டார்கள்? "பதமோதாத பாவமே!" என்று விநோதமாகச் சொல்லும் கதை யொன்று நினைவுக்கு வருகின்றது. ஸ்பஷ்ட மாகப் பதபாடமுள்ள வேத பாகத்திற்கே விருத்தமான பாஷ்யங்களியற்றினார்க ளென்றால், பதபாடமே அவதரிக்கப் பெறாத

ப்ராஹ்மண பாகத்திற்கும் உபநிஷத்துக்களுக்கும் அவர்களாலும் அவர்களினத்தவர்களாலும் இயற்றப் பட்ட பாஷ்யங்களைப் பற்றி என்ன சொல்ல வேண்டியிருக்குமோ தெரியவில்லையே. (விடை) என்ன சொல்ல வேண்டியிருக்கும்? ஏதோ மனம் போனபடி யெழுதிவைப்பவர்கள் என்று தான் சொல்ல வேண்டியிருக்கும். கீழே உதாஹரித்த வேத பாஷ்ய விமர்சநாதி க்ரந்தங்களில் இது வ்யக்தமாக எழுதப்பட்டு மிருக்கிறது. இத்தகைய விஷயங்களில் விசாரத்தை விட்டிட்டு பகவத்குண சேஷ்டிதாதிகளில் சர்ச்சை செய்யலாமென்று தோன்றுகிறது.

**48. வினா:—** மிக நன்று; அப்படியே செய்வோம். ஆச்ரிதாநுக்ரஹ ஆச்ரிதவிரோதி நிக்ரஹ சீலனான எம்பெருமான் செய்தருளின அவதாரங்களுள் ஆழ்வார்கள் அற்புதமாக அநுபவித்துப் பேசின நரஸிம்ஹாவதாரத்தின் முக்கிய காரணத்தைப் பற்றிச் சிறிது தெரிந்து கொள்ள விரும்புகிறேன். ஆழ்ந்து ஸாதிக்கவேணும். (விடை) இவ் வைதாரத்திற்குச் சொல்லப்படுங் காரணங்களுள் பிரதானமானது எதுவென்றால், பரமபக்த சிகாமணியான ப்ரஹ்லாதாழ்வான் திறத்தில் இரணியன் பட்ட அபசாரங்களைப் பகவான் பொறுத்திருக்க மாட்டாமையே— என்பதாம். இதனைப் பொய்கை யாழ்வார் தமது திருவந்தாதியில் "வரத்தால் வலிநினைந்து மாதவ! நின் பாதம், சிரத்தால் வணங்கானுமென்றே?—உரத்தினால், ஈரரியாய் நேர்வலியோனாய விரணியனை, ஓரரியாய் நீயிடந்த தூன்." (90) என்கிற பாசுரத்தில் ஆலங்காரிகர் களுக்கு உயிரான த்வநி மர்யாதையினால் வெளியிட்டருளியுள்ளார்.

**49. வினா:—** இப் பாசுரத்தின் சீரிய பொருளை ரஸிகர்கள் அநுபவிக்குமாறு விவரிக்க வேணும். (விடை) இப்பாட்டின் பின்னடிகளை முன்னம் அன்வயித்துக்கொண்டு பிறகு பின் னடிகளை அந்வயிப்பது. "மாதவ! நீ ஈரரியாய் நேர்வலியோனாய விரணியனை ஓரரியாய் ஊனிடந்தது (அவன்) வரத்தால் வலி நினைந்து நின்பாதம் சிரத்தால் வணங்கானு மென்றே?" என்று அந்வயித்து வினாவாகப் பொருள் கொள்வது. திருமாலே! நீ நரசிங்க மூர்த்தியாய்க் கிளர்ந்து இரணியனை உடல் கிழித்துப் பொகட்டதானது அவ்வரக்கன் உன்னுடைய திருவடிகளிலே தலைசாய்க்கவில்லையென்கிற காரணத்தினாலோ? (அன்று) என்றிவ்வளவே பாசுரத்தின் பொருள். கேள்விமாத்திரம் இங்கு உள்ளதே யன்றிக் கேள்விக்கு உத்தரம் இங்கில்லை. பரம ரஸிகர்களின் பேச்சினழகு இங்ஙனே யாயிற்று இருக்கும்படி. தம் திருவுள்ளத் திலோடுகிற அர்த்தத்தை வெட்ட வெளிச்சமாக வெளியிட்டு விடாமல் மறைத்து வைத்துக் கொண்டு அதுவெளிவரவேண்டியதான கேள்வியைமாத்திரம் இயற்றிவைப்பது ஒரு அழகு.

**50. வினா:—** இவ்விதமான பேச்சு முறை வேறு எங்கேனும் காண்பதுண்டோ? (விடை) இந்த ரீதி ஆழ்வாரருளிச் செயல்களிலும் ஆசார்ய ஸ்ரீஸூக்திகளிலும் மஹா கவிகளின் காவியங்களிலும் இனிது காணக் கிடைக்கும். மாதவனே! இரணியன் உன்னிடத்தில் ஆபி முக்ஷ்யம் பண்ணவில்லை யென்பதற்காகவா அவனை நீ வதைத்தாய்? என்றுள்ள இந்த வினாவானது, "அதற்காகவன்று; பக்தர்களில் தலைவனான ப்ரஹ்லாதாழ்வானிடத்தில் அவன் கனக்க அபசாரப்பட்டானென்பதற்காகவே அவனை நீ வதைத்தது" என்கிற விசேஷார்த்த ரூபமான விடையைப் பெறுவிக்க வல்லது. இதுதான் அந்த அவதாரத்திற்கு ப்ரயோஜனம்.

51. வினு:— இந்த வினுவுக்கு இதுதான் விடை என்பதை எந்த பிரமாணங்கொண்டு நிர்ணயிப்பது. (விடை) ஆழ்வாரருளிச் செயல்களில் பொதிந்துள்ள அர்த்த விசேஷங்களை பெரும்பாலும் வெளியிடுவதற் கென்றே ஸ்தவங்களை யருளிச்செய்த கூரத்தாழ்வான் வரதராஜஸ்தவத்தில் "யதபராத ஸஹஸ்ரமஜஸ்ரஜம் த்வயி சரண்ய! ஹிரண்ய உபாவஹத்; வரத! தேந சிரம் த்வமவிக்ரியோ விக்ருதி மர்ப்பக நிர்ப்ப ஜநாதநா:" என்கிற அறுபத்தெட்டாவது ச்லோகம் பொய்கையாழ்வாருடைய இந்தப் பாசுரத்தின் உட்பொருளை (விடையை) விளக்குவதற் கென்றே தோன்றியது. 'பேரருளாளனே! இரணியன் உன் திறத்தில் எத்தனையோ காலமாக எல்லை கடந்த அபராதங்களைச் செய்திருக்கச் செய்தேயும் அதனால் சிறிதும் சீற்றங்கொள் ளாமலிருந்த நீ, சிறுக்கனான ப்ரஹ்லாதனை அவன் நலிந்தது காரணமாகவன்றோ வேறுபாடுற்றாய்- என்பது இந்த ச்லோகத்தின் ஸ்பஷ்டமான பொருள். பொய்கையார் பாசுரத்திலுள்ள வினுவுக்கு இது விடையாக அமைந்தது எம்பெருமான் தன்னளவில் த்வேஷிக்குமவர்களைக் காட்டிலும் தன்னடியார்கள் திறத்தில் த்வேஷிக்கு மவர்களையே முக்கியமாக நிக்ரஹிப்பது என்கிற மஹத்தான சாஸ்த்ரார்த்தம் வெளிவருவது இங்கு ரஸிக்கத் தக்கது.

52. வினு:— எம்பெருமானுக்கு ஸ்வவிரோதிகளை விட ஆச்ரித விரோதிகளிடத்தில் தான் சீற்றமதிக மென்பதை நன்கு நிரூபிக்க வேணும். (விடை) "த்விஷதந்நம் ந போக்தவ்யம் த்விஷந்தம் நைவ போஜயேத்; பாண்டவாந் த்விஷஸே ராஜந் மம ப்ராணா ஹி பாண்டவா:" என்கிற கண்ணபிரானுடைய உக்தியைக் கொண்டும், "த்வயி கிஞ்சித் ஸமாபந்நே கிம் கார்யம் ஸீதயா மம?" என்கிற இராமபிரானுடைய உக்தியைக் கொண்டும் இந்த சாஸ்த்ரார்த்தத்தை நம் ஆசார்யர்கள் நிலையிட்டார்கள். இங்ஙனே பல விடங்களிருந்தாலும் மேலே காட்டின இரண்டிடங்கள் முக்கியமானவை.

53 வினு:— இவ்வர்த்த விசேஷம் ரஹஸ்யக்ரந்தங்களில் சர்ச்சிக்கப்பட்டு முடிவு பெற்றிருக்கின்றதா? (விடை) ஸ்ரீவசனபூஷணத்தில்-"ஈச்வரன் அவதரித்துப் பண்ணின ஆனைத் தொழில்களெல்லாம் பாகவதாபசாரம் பொறாமையென்று ஜீயர் அருளிச்செய்வர்" என்றுள்ள ஸ்ரீஸூக்தி இந்த சாஸ்த்ரார்த்தத்தைச் செவ்வனே வெளியிடுவது. இந்த சூர்ணிகையின் பொருளாவது—ஸங்கல்ப மாத்திரத்தாலே ஸர்வத்தையும் நிர்வஹிக்கவல்ல ஸர்வ சக்தியான ஸர்வேச்வரன் தன்னையழிய மாறி இதர ஸஜாதீயனாய் அவதரித்துக் கை தொட்டுச் செய்த ஹிரண்ய ராவணாதி நிரஸநமாகிற அதிமாநுஷ சேஷ்டிதங்களெல்லாம்— ப்ரஹ்லாதாழ்வான் மஹர்ஷிகள் முதலான பாகவத விஷயங்களில் அவ்வவர்கள் பண்ணின அபசாரம் ஸஹியாமை யாலே யென்று நஞ்சீயர் அருளிச் செய்வர்— என்பதாம்.

54. வினு:— "பரித்ராணாய ஸாதூநாம் விநாசாய ச துஷ்க்ருதாம்" என்கிற கீதா ச்லோகத்தில் எம்பெருமானுடைய அவதாரத்திற்கு ப்ரயோஜநமாக ஸாது பரித்ராணமும் துஷ்க்ருத் விநாசமும் ...சொல்லப்பட்டன. இவற்றுள் துஷ்க்ருத் விநாசனமானது [ஹிரண்ய ராவணாதிகளைக் கொலை செய்வது] ஸங்கல்பத்தினாலும் ஸாத்யமென்றும், ஸாது பரித்ராணமானது அப்படி ஸங்கல்ப ஸாத்ய மன்றிக்கே நேர் கொடு நேரே அவதரித்தே செய்யக் கூடியதென்றும், ஆகவே ஸாது பரித்ராணந்தான் அவதாரத்திற்கு ப்ரதாந ப்ரயோஜந மென்றும் ஸ்ரீ பாஷ்யகாரர் *அந்தாதி

கரணத்திலருளிச் செய்திருக்கிறேரே; அதற்கு இது முரண்படாதோ? (விடை) ஸாது பரித்ராண மென்பதை விவரிக்குமிடத்து, அநிஷ்ட நிவாரணமும் இஷ்டப்ராபணமும் சேர்ந்தே பரித்ராண மாகுமாதலால் அநிஷ்டநிவாரணம் செய்யாதவளவில் பரித்ராணம் பூர்த்தி பெறுதாதலால் அநிஷ்டநிவாரணமும் மிக முக்கியமான காரியமாயிற்று. இது ஸங்கல்பத்தாலேயே செய்யக் கூடியதாயிருக்கச் செய்தேயும் எம்பெருமான் அடியார்களிடத்து வைத்த அன்புமிகுதியினுல் ஸங்கல்பத்தால் செய்துவிடாமல், கண்காண வந்து நேர்நின்று போர்புரிந்து சித்ரவதங்களைப் பண்ணியே திருவுள்ளத்தில் தேறுதலடைகின்ருனென்று பிரமாணங்களினுல் தெரியவருவதால் பக்தவத்ஸலனுன பகவான் பக்த விரோதிகளை நிரஸிப்பதற்காகவே திருவவதாரங்கள் செய்தருள் கின்ருனென்றும் அறுதியிட வேண்டிற்ருயிற்று.

55. வினு:— இவ்விஷயத்தை விசதமாக நிருபிக்க வேணும். (விடை) அஸுர ராக்ஷஸப்ரப்ருதிகள் பகவானிடத்தில் நேராகவே விரோதிப்பவர்களுமுண்டு; பகவத் பக்தர்களை விரோதிப்பவர்களுமுண்டு கம்ஸனைப் பற்றிச் சொல்லுகையில், பெரியாழ்வார் "தீய புந்திக்கஞ்சனுன்மேல் சினமுடையன் சோர்வு பார்த்து, மாயந்தன்னுல் வலைப்படுக்கில்" என்று அவன் பகவத் விரோதியென்று பேசினுர். நம்மாழ்வார் "சாதுசனத்தை நலியுங் கஞ்சனைச் சாதிப்பதற்கு ஆதியஞ் சோதியுருவை யங்குவைத்திங்குப்பிறந்த" என்ற பாசுரத்தில் அவனை பாகவத விரோதி யென்றே விளக்கினுர். இங்ஙனே இரண்டு விதமான தன்மைகள் ஆஸுர ப்ரக்ருதிகளுக்கு இருக்கவும், எம்பெருமான் 'ந ஸ்மரத்யபகாராணும் சதமபி ஆத்மவத்தயா" என்று புகழப்பட்ட குணக்கடலாதலால் தன் விஷயத்தில் தீங்கு செய்பவர்களிடத்தில் சீற்றங் கொள்ளாமல் தன்னடியார்களிடத்தில் தீங்கு செய்பவர்களையே களைந்தொழிக்கக் கிளர்கின்ரு னென்ருல் இதுவன்ருே மிகச் சிறந்த மஹா குணம்.

56. வினு:— தண்ணளியில் தண்ணீர்போன்ற பகவானுக்குப் பகைவர் இருக்க முடியாதே; கீதையில் "ஸமோஹம் ஸர்வபூதேஷு ந மே த்வேஷ்யோஸ்தி ந ப்ரிய:" என்கிருனே எம்பெருமான் தானே. "தேவாநாம் தாநவாநாம் ச ஸாமாந்யமதிதைவதம்" என்று துதிக்கிருன் நான்முகன். இப்படிப்பட்ட பகவான் சிலரையோ பலரையோ விரோதிகளாகக் கொண்டு நலிகிருனென்ருல், இதை எங்ஙனே பொருந்தவைப்பது? (விடை) தன்னடியார்களுக்கு த்ரோஹம் செய்பவர்களைத் தனக்கு த்ரோஹிகளாகத் தான் நினைக்குமவனுகையாலே— என்று இவ்விஷயம் பலபல ப்ரமாண உபபத்திகளுடன் வேதாந்தவாசிரியருட்பட ஸகல ஆசார்யர் களாலும் மூதலிக்கப் பட்டுள்ளது. விவரிக்கிறேன், கேளாய். "ஜ்ஞாநீ து ஆத்மைவ மே மதம்" என்கிற கீதாச்லோக மொன்றை யெடுத்துக் கொள்வோம். "ஜகத் ஸர்வம் சரீரம் தே" என்பது முதலான பல பிரமாணங்களினுல் ஸகல பதார்த்தங்களும் பகவானுக்கு சரீரபூதங்க ளென்றும், பகவானெருவனே உயிர்க்கும் உயிரானவனென்றும் அசைக்க முடியாதபடி தேறியுள்ள விஷயம். இஃது இப்படியிருக்க "ஜ்ஞாநீ து ஆத்மைவ மே மதம்" என்கிருன்தானே. இங்கு மே மதம் என்றதன் ஸ்வாரஸ்யத்தை தாத்பர்ய சந்த்ரிகையில் ஸ்வாமி வெகு அற்புதமாக எடுத்துக் காட்டுகின்ருர். கீதையில் கண்ணன் வாய் திறந்து தான் சொல்லுகிற அர்த்தமெல்லாம் தன்னுடைய மதமாயிருக்க, இங்கு விசேஷித்து மே மதம் என்ன வேண்டுமோ? எதற்காக இங்கு மே மதமென்ருனென்னில்; ... ... (தொடரும்.)

Rgd. No. 2975 ஸ்ரீராமாநுஜன்

**மிக முக்கியமான அறிவிப்பு;**—நமது ஸத்க்ரந்த ப்ரகாசன ஸபை புத்துயிர்பெற்று நாலைந்து மாதங்களாகின்றன வென்பதும் இச்சபையின் மூலமாக ஸ்ரீ வைஷ்ணவ ஸம்பிரதாய நூல்கள் பலவும் அச்சிடப்பட்டு வருகின்றனவென்பதும் உலகம் பரவியுள்ளது. ஆஸ்திகர்கள் பலரும் இச்சபையில் மெம்பராகச் சேரும்படி கோரப்படுகிறார்கள். இதற்குச் செலுத்தவேண்டிய வருடச்சந்தா ரூ. 25 மட்டுமே. 213 நெ. கோவிந்தப்பநாய்க்கன் தெரு, ஜி. டி. மதராஸ் - இந்த விலாஸத்தில் விவரங்கள் தெரிந்துகொள்க. ... ... ... .... ( )

நமது ஸ்ரீவைஷ்ணவ சம்பிரதாய நூல்கள் கிடைக்குமிடங்கள்:—

(1) க்ரந்தமாலா ஆபீஸ், சின்ன காஞ்சீபுரம்.

(2) M. A. KRISHNAMMAL, Advocate,
20, South Mada Street, Triplicane, Madras-5.

(3) A. RAMANUJACHARI, B. A.,
A 230 E. Type, Pandara Road, New Delhi.-11.

(4) S. R. SRINIVASAYYANGAR,
11/5, ஐஸ்ஹௌஸ் ரோட், திருவல்லிக்கேணி.

If un-delivered please return to:

**P. B. ANNANGARACHARYA,**
L. KANCHEEPURAM.

Edited and Published by P. B. Annangaracharya Swami
for Madras Satgrantha Prakasana Sabha.
Printed by T. A. P. Srinivasavaradan at Sri Venkateswara Press,
Sannidhi Street. L. Kanchipuram.